உ

# செட்டிநாடு

திங்கள் இருமுறை

சமய வளர்ச்சி, மொழியாக்கம் கருதி உழைப்பது.

மலர்-26] துன்முகி-கார்த்திகை-28 13-12-56 [இதழ்-4

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன் செட்டியார்




முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்

ஒவ்வொரு இரண்டாவது நான்காவது
வியாழக்கிழமைகளில் வெளிவரும்.

# நற்றிணை - தெளிவுரை

## பாலை

தலைவியைத் தலைவன் உடன்போக்கிற் கொண்டு சென்ற பிறகு கற்பொடு புணர்ந்த கௌவைக்கண் மனையகத்திருந்த நற்றாய் ஏதிலார் கூறும் பழமொழி பொருளாய் வெகுண்டு கூறியது.

இரும்புனிற் றெருமைப் பெருஞ்செவிக் குழவி
பைந்தா தெருவின் வைகுதுயின் மடியுஞ்
செழுந்தண் மனையோ டெம்மி வணொழியச்
செல்பெருங் காளை பொய்மருண்டு சேய்நாட்டுச்
சுவைக்காய் நெல்லிப் போக்கரும் பொங்கர்
வீழ்கடைத் திரள்கா யொருங்குடன் றின்று
வீசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த
குவளை யுண்கணென் மகளோ ரன்ன
சேய்போழ் வெட்டிப் பெய்த லாய
மாலைவிரி நிலவிற் பெயர்புபுறங் காண்டற்கு
மாயிருந் தாழி கவிப்பத்
தாவின்று கழிகவெற் கொள்ளாக் கூற்றே. 271

மிக இளையதாகிய எருமையினது பெரிய காதுகளையுடைய கன்று, பசிய மகரந்தங்களுதிர்ந்து எருவாகக் கிடக்கின்ற தொழுவத்திடத்துப் பொருந்திய துயிலை மேற்கொண்டு உறங்குகின்ற செழுமையையுடைய குளிர்ந்த இவ்வீட்டுடனே எம்மை இங்கே ஒழியவிட்டு உடன்வருகின்ற பெரிய காளைபோன்றவனது பொய்மொழிகளுக்கு மயங்கித் தொலைவிலுள்ள அவனது நாட்டை அடைய விரும்பிச் சுவையுடைய காய்கள் நிறைந்த நெல்லிமரங்கள் மிகுந்த சோலையிலுதிர்ந்த கடையிலே திரண்ட காயை ஒருசேரத் தின்று வறந்த சுனையிலுள்ள சிறிய நீரைப் பருகிச் சென்ற நெய்தல்மலர்போன்ற மையுண்ட கண்ணையுடைய என் மகளை ஒருதன்மையாகிய சிவந்த பனங்குருத்தைக் கீண்டு பதனிடுதற்குப் போடுகின்ற மாலைப்பொழுதில் விரிந்த நிலவிலேசென்று புறங்காணும்படியாக விட்ட இதற்கு முன்னாலேயே என்னைப் பெரிய கரிய தாழியிலிட்டுக் கவிக்கும்படி என் உயிரைக் கொண்டுபோகாத கூற்று வலியழிந்து இறந்துபடுவதாக.




அரியு மல்ல வரனு மல்ல வப்புறத்தி லப்புறங்
கருமை செம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்
பெரிய தல்ல சிறிய தல்ல பற்றுமின்கள் பற்றுமின்
துரிய முங்க டந்து நின்ற தூர்தூர தூரமே

:-சிவவாக்கியர் பாடல்-10

உரை: 'அரியும் அல்ல-திருமாலும் அல்ல, அரனும் அல்ல-உருத்திரனும் அல்ல, அப்புறத்தில் அப்புறம்-அப்பாற்பட்ட ஈச சதாசிவர்களுக்குமேலே, கருமை-கருமையையும், செம்மை-செம்மையையும், வெண்மையை-வெண்மையையும், கடந்துநின்ற-தாண்டிநின்ற காரணம்-எல்லாவற்றிற்கும் காரணமாயிருக்கின்ற பரம்பொருள், பெரியதல்ல-பெரியபொருளுமல்ல சிறியதல்ல-சிறியபொருளுமல்ல, துரியமுங்கடந்துநின்ற-நான்காவதுநிலைக்கு அப்பாற்பட்டுநின்ற, தூர தூரதூரம்-தொலைவுக்குத்தொலைவுக்குத் தொலைவிலுள்ளதை, பற்றுமின்கள் பற்றுமின்-நெகிழவிடாது பற்றுவீர்களாக' என்பதாகும்.

தென்றமிழ்நாட்டில் வாழ்ந்திருந்த சித்த பெருமக்கள் பதினெண்மரென்று தொன்றுதொட்டுச்சொல்லப்பெற்றுவருகின்றது எத்தனையோ கோடிக்கணக்கான சித்தர்பெருமக்கள் தோன்றி அன்றும்-இன்றும்-என்றும் வாழ்ந்துவரும் சிறப்புடையதுநமது நாடு. என்றாலும் இவர்களைப் பதினெண் சித்தர்கள் என்றுசொல்லும் வழக்கு, அறுபத்துமூன்று நாயன்மார்கள் என்று சொல்லும் வழக்கோடு ஒத்ததாகும். எத்தனையோ நாயன்மார்களைத் தொகையடியார்களில் வைத்து நாம் வழிபட்டு வருகின்றோமென்பது நாமறிந்ததுதானே!

சித்தர்களில் முதல்வராகச் சிவவாக்கியர் கருதப்பெறுகின்றார் இவரியற்றியனவாக ஐந்நூற்றுப் பதினெட்டுப் பாடல்கள் சித்தர் ஞானக்கோவை என்ற நூலில் காணப்பெறுகின்றன. சிவபரத்துவத்தை நிலைநாட்டுவதிலும், சரியை, கிரியை, யோகம், ஞானமாகிய சன்மார்க்க நெறிகளின் உண்மையை வலியுறுத்துவதிலும் திருவைந்தெழுத்தின் சிறப்பைப் புலப்படுத்துவதிலும் இவர் பேரார்வங் கொண்டிருந்தாரென்பதை இவரது பாடல்கள் அறிவிக்கின்றன.

தொடக்கத்திலேயே 'ஆனஅஞ் செழுத்துளே அண்டமும் அகண்டமும், ஆன அஞ்செழுத்துளே ஆதி யானமூவரும், ஆன அஞ்செழுத்துளே அகாரமும் மகாரமும், ஆன அஞ்செழுத்துளே அடங்கலால வுற்றதே' என்று திருவைந்தெழுத்தின் சிறப்பியல்பை உணர்த்தும் முகமாகச் சிவபரத்துவத்தை நிலைநாட்டுகின்றார் இவர்.

பிரபஞ்சப் பொருள்கள் காட்சிக்கு வருவனவும் வாராதனவுமென இருவகையின. காட்சிக்குவரும் பொருள்களெல்லாம் அண்டத்தில் அடங்கியிருக்கும். வாராத பொருள்களை அகண்டப் பொருள்களென்று சொல்லுவர். திருவைந்தெழுத்திற்குள் இவ்விருவகைப் பொருள்களும் அடங்குமெனவே, அதன் ஆழ்ந்தகன்ற நுண்மை அறியப்பெறும்.

அநாதியான பரமசிவம் துரிய மூர்த்தியாக மேலிடத்திலிருக்க, அவருக்குக் கீழே உருத்திரன், திருமால், பிரமன் ஆகிய மூவரும் இருந்து அழித்தல், காத்தல், படைத்தல் ஆகிய முத்தொழில்களையும் புரிந்துகொண்டிருக்கிறார்களென்று ஞானநூல்கள் கூறுகின்றன. இதனை 'மூவண்ணல் தன் சந்நிதி முத்தொழில் செய்ய வாளா மேவண்ணல்' என்ற பரஞ்சோதி முனிவர் திருவாக்காலறியலாம்.

மும்மூர்த்திகளும் செய்கின்ற முத்தொழில்களும், அவரவர் சுதந்திரத்தாற் செய்யப்பெறுவனவல்ல: அவர்கள் அதிட்டித்து

நின்று ஆண்டவனே அத்தொழில்களைச் செய்கின்றான். பிரமனும் திருமாலும் மும்மலமுடைய சகல வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களது முன்னை நல்வினையாகிய புண்ணியத்திற் சேறப் சீகண்ட ருத்திரர் அவர்களைப் படைத்துத் தமதுபடைக்கும் சத்தியைப் பிரமனிடத்தும் காக்குஞ் சக்தியைத் திருமாலிடத்தும் நிறுத்தி அவரை அதிட்டித்து நின்று அவ்விரு தொழில்களையும் செய்வார். பின்பு மூலப் பிரகிருதியுட்பட்ட உலகங்களைச் சங்கரிக்கும் பொழுது அவ்வுலகங்களோடு சேர்த்து அயனும் மாலுமாகிய இருவரையும் அவர் சங்காரிப்பார். இது, மத்தியப் பிரளயமென்று சொல்லப்பெறும்.

சீகண்ட ருத்திரர் இருமலமுடைய பிரளயாகலருள் ஒருவராயிருந்து மலபரிபாக முடையவராய்ப் படைப்புக் காலத்திற் பரமசிவனருளால் இப்பதத்தைப் பெற்றவர். இவர் அட்டவித்தியேசுவாருள் ஒருவராகிய அநந்தேசுவரரால் அதிட்டிக்கப் படுவார். அநந்தேசுவரர் விஞ்ஞானகலருள் ஒருவராயிருந்து மலபரிபாக முடையவராய்ப் படைப்புக் காலத்தில் பரமசிவனது அநுக்கிரக அதிகாரம் பெற்றவர். இவர், பரசிவ சத்தியால் அதிட்டிக்கப் பெறுவர். இவரால் செய்யப்பெறும் சங்காரம், அவாந்தரப் பிரளயம்' எனப்பெறும்.

மத்தியப் பிரளய காலத்தில் சீகண்டருத்திரர் திருமாலையும் பிரமனையும் தம்மிடத்திலே ஒடுக்கிக்கொண்டு தாமொடுங்காதிருப்பார். அவாந்தரப் பிரளயகாலத்தில் இவர் பரமசிவனருளாற் பரமுத்தியடைவார்.

இறுதியாகப் பரமசிவனாற் செய்யப்பெறும் மகா சங்காரகாலத்தில் பிரகிருதி மாயாகாரியமாகிய அசுத்தப் பிரபஞ்சமும் அசுத்த மாயா காரியமாகிய சுத்தாசுத்தப் பிரபஞ்சமும் சுத்தமாயாகாரியமாகிய சுத்தப்பிரபஞ்சமுமாகிய எல்லாம் சங்கரிக்கப்பெறும். இக்காலத்தில் அநந்தேசுவரரும் பரமுத்தி அடைவர். இவ்வாறு பரமசிவன் மகாசங்கார காலத்தில் எல்லா உலகங்களையும் சங்கரித்துத் தம்மிடம் ஒடுக்கிக்கொண்டு தாம் ஒருவரே சுயம்பிரகாச

ராய் விளங்குவாராதலாலும் படைப்புக் காலத்திலும் ஒடுங்கிய முறையே சுத்த மாயா காரியங்களைத் தாமே நேரிலும் அசுத்த மாயா காரியங்கள் முதலியவற்றை அநந்தேசுவரராதியோரை அதிட்டித்து நின்றும் தோற்றுவிப்பாராதலாலும் 'அந்தம் ஆதி என்மனார் புலவர்' என்று சிவஞானபோதம் அறிவுறுத்திற்று.

மத்தியப் பிரளய காலத்திலும் அவாந்தரப் பிரளய காலத்திலும் ஒடுங்கித் தோன்றுகின்ற மும்மூர்த்திகளில் எவரையும் யும் முதற் கடவுளாகக் கொள்ளுதல் முறையன்று. அதனால்தான் 'ஆனஅஞ் செழுத்துளே ஆதியான மூவரும்' என்று முதற் செய்யுளிலே இவ்வாக்கியர் மொழிந்தார்.

'ஆதியான மூவர்' என்று மும்மூர்த்திகளைக் குறிப்பதால் அநாதியான ஒருவர் இவர்களுக்கு மேலே உண்டு என்பதுவிளங்கும். இதனையே மேற்கண்ட பாடலின் முன்னிரண்டடிகள் புலப்படுத்திக்கொண்டிருக்கின்றன. பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய ஐந்து மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டிருக்கின்ற பரம்பொருள் பரமசிவம். இதனை 'அதுவுமல்ல அப்புறத்தி லப்புறம்' என்று உணர்த்தினர்.

இனிக் கருமை திருமாலின் நிறமென்பதும் செம்மை உருத்திரனின் நிறமென்பதும், வெண்மை பிரமனின் நிறமென்பது காமநிந்தனவே. மாயா காரியமாகிய இம்முக்குணங்களும் இன்றி இவைகளும் இவைபோன்ற ஏனைய மாயா காரியங்களும் உண்டாவதற்கு நிமித்த காரணமாயிருப்பவன் இறைவனென்பதை இரண்டாவது வரி அறிவிக்கின்றது.

சிவபரம் பொருளை அணுவுக்கு அணுவென்றும், மகத்துக்கு மகத் என்றும் வேதம் சொல்லும். 'அண்டங்களெல்லாம் அணுவாக அணுக்களெல்லாம் அண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினானும்' என்பார் பரஞ்சோதிமுனிவர். 'நுண்ணியான் மிகப்பெரியான்' என்பது ஆளுடையபிள்ளையார் திருவாக்கு. இதனையே 'பெரியதல்ல சிறியதல்ல' என்று இவ்வாசிரியர் கூறினர்.

உயிர்களுக்குச் சாக்கிராவத்தையில் எல்லாக் கருவிகளும் தொழிற்படும். சொப்பனவத்தையில் சில கருவிகள் தொழிற்படா. சுழுத்தியில் மூன்று கருவிகள் மட்டும் தொழிற்படும். துரியத்தில் பிராணவாயுவும் புருடனும் மட்டுந்தான் உண்டு. அதனைக்கடந்த துரியாதீதம் புருடனை மட்டும் உடையது. கருவி காரணங்கள் செயலற்றால் கடவுளைப் பற்றும் வாய்ப்பு உண்டென்பதை 'துரியமும் கடந்து நின்ற தூர தூர தூரமே' என்று விளக்கினர்.

'நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன், தன்செயல் தானே யென் றுந்தீபற, தன்னையே தந்தானென் றுந்தீபற' என்ற திருவுந்தியாரை இங்கே நினைவுகூருதல் வேண்டும்.

## ஆறுமுக நாவலர் குருபூசை

யாழ்ப்பாணத்து நல்லூரில் தோன்றிச் சிதம்பரத்தலத்து வதிந்து காஞ்சிபுரம் முதலிய தலங்களில் சைவச் சொற்பொழிவுகள் ஆற்றிச் சைவமும்தமிழும் தழைத்தோங்க அரும்பெரும் தொண்டுகள்செய்து ஸ்ரீ ஆனந்தநடராசப்பிரான் திருவடி அடைந்த சிதம்பரம் ஆறுமுகநாவலர் பெருமான் 77வது குருபூசை, காஞ்சி மெய்கண்டார் கழகத்தினரால் கச்சபேசர் திருக்கோயிலில் மிகச் சிறப்பாக நடத்தப்பெற்றது. கழகச் செயலாளர் திருஞானசம்பந்தமுதலியார் 'நாவலர் சைவத் தொண்டு' பற்றி நாவலர்பெருமானிடத்தில் நைட்டிகப் பிரமசரிய ஒழுக்கம், திருமுறைகளில் பெருமதிப்பு, சிவாலயவிதிகளில் அழுத்தம், தவறான வழிகளைக் கண்டிக்கும் தீரவுணர்ச்சி, பெரியபுராணப்பற்று இவைகள் சிறப்பாக இருந்தன என்று விளக்கங்காட்டிப் பேசினார். 500க்கு மேற்பட்ட அன்பர் குழாங்கள் வந்திருந்தனர். நன்றிகூறி வாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

## மிக நீளமுள்ள ரயில்வே பாலம்

இந்தியாவில் மீட்டர் கேஜ் ரயில் பாலங்களிலேயே அலஹாபாதுக்கருகில் கங்கை நதிமீதுள்ள இஸத்பாலம்தான் மிக அதிக நீளமுள்ளதாகும். அதன் நீளம் 6,830 அடி.

# எலும்பில்லா நாக்கு எப்படியும் புரளும்?

தொகுப்பு:-சூருவளி-லெட்சுமணன்

அறியாமையே மடமைக்குக் காரணம். கல்வி பரவினால் அறியாமை ஒழியும்! அறியாமை ஒழிந்தால், மடமை ஒழியும். ஆகவே கல்வியைப் பரப்புங்கள் :- ஈ. வே ரா.

படித்தவர் நாக்கு அல்லவா அது. எப்படி வேண்டுமானாலும் புரளும்! அதை நம்பக்கூடாது. படிப்பில்லாதவன் புரண்டு புரண்டு பேசமாட்டான். பேசவாரது. படித்தவர்கள் பித்தலாட்டுக்காரர்கள் :- ஈ-வே-ரா.

படிக்காவிட்டால் முட்டாள் படித்தால் புரட்டன்!

பார்ப்பனர்களை உதைத்து விரட்டுங்கள்! புரட்சிசெய்யுங்கள் :- ஈ-வே-ரா.

பலாத்காரச் செயல்களைச் செய்கிறவர்களைப் போலீஸிடம்பிடித்துக்கொடுத்துத் தண்டனை வாங்கிக்கொடுக்கவேண்டும் என்றவர் யார்?:- ஈ-வே-ரா. பேசினால் புரட்சிக்காரன். செய்தால் குற்றவாளி.

பிராமணர்கள் படைதிரட்டட்டும்! திராவிடர்களைத் தாக்கட்டும். தாக்கப்படும் திராவிடன் நம் தோழன் 'தியாகி'. ஒருவன் தாக்கப்பட்டால் அவனைக்காட்டி ஆயிரம்பேரைத் தட்டிஎழுப்புவோம். யுத்தத்திற்குத்தயார். தோழர்களே! பார்ப்பனர்களை விரட்டக்கிளம்புங்கள் :- ஈ-வே-ரா.

அக்கிரகாரத்தில் புகுந்து பார்ப்பனர்களைத் தாக்குபவர்கள் எல்லோரும் ரவுடிகள் என்றவர்யார்? விடுதலை ஆசிரியர் குத்தூசியார்! அடித்தால்ரவுடி-அடிவாங்கினால்தோழன். குத்தினால் கொலைகாரன்-குத்துண்டால் தியாகி.

புராணங்கள், இதிகாசங்கள், காவியங்கள் முதலியவை வெறும் புரட்டுகள், கட்டுக்கதைகள். பொய்மூட்டைகள் அவற்றை நம்புவது முட்டாள்தனம் பேதைமை! :-ஈ-வே-ரா.

புராணங்கள் ஆரியதிராவிடப் போரைச் சித்தரிக்கும் சரித்திர ஏடுகள். அதில்வரும் விஷயங்கள் எல்லாம் ஆரியருக்கும்

(14ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

மற்றைப் பிரதேச மொழிகளிலும் அன்ன நூல்களிருக்கலாம். அங்ஙனமாக ஆன்மஞானம் சில குறிப்பிட்ட மொழிகளில் மட்டுமே பூட்டிவைக்கப்பட்டிருக்கிறதெனச் சைவமக்கள் சொல்லுவாரா? மாட்டவே மாட்டார். மூடநம்பிக்கையென வொன்றிருக்குமானால் அதற்குச் சைவ விற்பன்னரே பாமசத்துருவென்பதை நவீனரறிக. ஆனால் அந்த ஞானத்துக்கு அங்குரம் சம்ஸ்கிருதத்திற்றானமைந்து கிடக்கிறது. அதை மறுக்க முடியாது. அவர் அவ்வங்குரத்தைக் கண்டுமகிழப் பிரியப்படாமல் தம் கண்களையே சிக்கென மூடிக்கொள்கின்றனர். அதனால் தாய்மொழியே ஆன்ம வளர்ச்சிக்குப் போதுமானதென்றுரவர். அதுவே மூடநம்பிக்கையாகும்.

'சாந்திநிகேதனத்தில்... அங்குள்ளவர்கள் கூடி சமுசுகிருத மந்திரங்களைச் சொல்லி வழிபாடு செய்வது... தெரிந்திருக்கும். ஒருநாள் ஒருசிறுபெண் தன்பாட்டனுரோடு அப்பக்கம் சென்றது... தன்பாட்டனுரை நோக்கி, அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று கேட்டது. அவர்கள் வழிபாடு செய்கிறார்கள் என்ற விடை வந்ததும், என்ன மொழியில்? என்ற வினவை அக்குழந்தை விடுத்தது. சமசுகிருதத்தில் என்று பாட்டனர் சொன்னதும், அக்குழந்தை... பாட்டனரிடம் கேட்டது. ஏன், தாத்தா சாமிக்கு பெங்காலி தெரியாதா?' (24-4-56 தமிழ்நாடு) என்றொரு கதைபேசுகிறார் நவீனர். அச்சிறுமியின் வினவும் ஓராதாரம். அந்நிகேதன ஸ்தாபகர் இரவீந்திரநாத தாகூர் என்பவர். அங்கு வழிபாடு சம்ஸ்கிருதத்தில் நடந்துவருமாறு ஒருக்கால் அவரே திட்டஞ்செய்து போயிருக்கலாம். அப்பெண் அங்குச் சென்றபோது அவ்வழிபாடு செய்துகொண்டிருந்தவரும் மூடநம்பிக்கைக்காராயிருந்திருப்பரோ? இல்லையில்லை அந்நிகேதனத்திலேயே கலைபல பயின்று அறிவுசிறந்தவராய்த்தானிருந்திருப்பர். தன் அற்ப புத்தியால் அச்சிறுமி அவ்வினவைக்

கேட்டதென்பதே சித்தம். பாவம். அச்சிறுமியைவிட்டுவிடலாம். 'தென்னுடைய சிவனுக்குத் தென்னாட்டு மொழியாகிய தமிழ் தெரியுமா? தெரியாதா?' (21-8-55 தமிழ்நாடு) என அச்சிறுமியின் புத்திகொண்டவொரு பெரிய நவீனரே கேட்கிறார். அவ்விருவர் வினாக்களுமொன்றே. அப்பெரிய நவீனரின் மூளையைச் சிறிதே சோதிக்கலாம். அச்சிவனுக்குத் தமிழ்தெரியுமா? தெரியாதா? என அவர் எவரை வினவுகிறார்? என்னிடமா? ஒருவனுக்கு ஒருவிஷயந் தெரியும், தெரியாது என்பதை அடுத்தவன் அறிந்திருப்பானென்பது நிச்சயமில்லை. ஆகவின் அவர் அவ்வினாவை அச்சிவனிடமே கேட்டு விடைபெறுக. மேலும் அவன் தென்னாட்டுச் சிவனாகலின் அவனுக்குத் தெரியாத மொழிகளும் பலவிருக்கும். ஒருநாட்டரசன் வேறுபல நாடுகளையுங் கைவசப்படுத்தி அந்நாடுகளுக்கும் இறைவ(அரச)னாகலாம். ஆனால் அவனுக்கு அவ்வசப்பட்ட நாடுகளில் வழங்கும் மொழிகளுந் தெரியுமென்பதில்லை. ஆங்கிலநாட்டு விக்டோரியா மகாராணி பாரதத்தையும் வசப்படுத்திப் பலவருடங்கள் ஆண்டும் அவளுக்குப் பாரதத்தில் வழங்கிய மொழிகளெல்லாந் தெரிந்திருந்தனவா? அங்ஙனமே தென்னாட்டுச் சிவன் எந்நாட்டுக்கும் இறைவனாயிருந்தாலும் அந்நாடுகளிலுள்ள மொழிகளனைத்தையுந் தெரிந்திருந்தானெனச் சொல்லமுடியாது. ஆகலின் அவனுக்குத் தெரிந்த மொழி யிது என்பதோடு தெரியாத மொழிகள் இவை என்பதையும் அவனையே நவீனர் கேட்டுத் தெரிந்துவைத்துக் கொள்வது நல்லது. பிறகு அவர் அர்ச்சனையை அவனுக்குத் தெரிந்த மொழியிற் செய்யலாம், தெரியாத மொழிகளிற் செய்யாம விருக்கலாம். அவனுக்கு எல்லா மொழிகளுமே தெரியுமென்பது அவருக்குங் கருத்தாயின் அவ்வினாவுக்கே அவசியமில்லை. சிவபெருமானுக்குச் சம்ஸ்கிருதமாத்திரந் தெரியும், மற்ற மொழிகள் தெரியா என்ற அடிப்படையிலா சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனை நடந்துவருகிறது? அதை யாதரிப்பவரும் அந்த அடிப்படையிலா ஆதரிக்கின்றனர்? வாதப்பிரதிவாதம் நேர்ந்தால் ஒருவர் கூறுவதை அவருள்ளத்தோடு பொருந்தவைத்து மற்றவர் வாங்க வேண்டும். அப்படி வாங்கிக்கொண்டு பிறகு அதை மறுப்பதுதான் ஒழுங்கு. நவீனரிடம் அஃதில்லை. ஒருவர் கூறுவதைத்

(12ம் பக்கம் பார்க்க)



செட்டிநாடு

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

'அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து'

சந்தா:

உள்நாடு ரூ—3

வெளிநாடு ரூ—6

துன்முகி கார்த்திகை-28

# ஆருத்திரா தெரிசனம்

பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளலாகிய ஐந்தொழில்களையும் புரிந்து, உயிர்களின் ஆணவ இருளையகற்றிச், சிவமாந்தன்மைப் பெருவாழ்வை அவைகளுக்கு வழங்கி ஆட்கொள்ளுகிறார். இதுவே, ஐந்தொழிற் கூத்து என்று சொல்லப்பெறும். இதனைப் புரிபவர் நடராஜமூர்த்தி.

நடராசமூர்த்தியின் திருவுருவத்தில் நான்கு திருக்கரங்களும் இரண்டு திருவடிகளும் காணப்பெறுகின்றன. வலத்தில் ஒன்றும் இடத்தில் ஒன்றுமாகத் தூக்கியிருக்கும் இரண்டு திருக்கரங்களிலும் முறையே உடுக்கையையும் நெருப்பையும் காண்கின்றோம். வலக்கையிலுள்ள உடுக்கையின் ஒலி நாதத்தைக் காட்டும். நாதமே படைப்புக்குக் காரணமாயிருப்பது. இந்தக்கை படைப்புக் கடவுளென்பதைக் காட்டுகின்றது.

இடக்கையிலுள்ள நெருப்பு அழித்தலைக் காட்டுவது. இந்தக்கை சங்கார கருத்தா வென்பதை உணர்த்துகின்றது. மற்றொரு வலதுகை பயப்படாதே என்று குறிப்புக்காட்டிக் காத்தற் கடவுளென்பதை அறிவிக்கின்றது.

ஊன்றியிருக்கின்ற வலது திருவடி ஒரு அரக்கனுடைய உருவத்தை மிதித்துக்கொண்டிருக்கிறது. அவ்வரக்கன் தலைநிமிர்ந்து உடலும் கால்களும் வேவ்வேறு விதங்களில் திருகலாயிருக்கிறான். இவனுக்கு முயலகனேன்று பெயர். இந்தத் திருவடி உலக போகங்களில் அழுந்தி இளைத்த உயிர்களைத் தன்கீழ் அழுத்திவைத்து இளைப்பாறச் செய்வதாகிய திரோபவக் (மறைத்தல்) கடவுள் என்பதைப் புலப்படுத்துகின்றது.

கீழே தோங்கவைத்து வலதுபுறமாக வீசி நீட்டியிருக்கும் மற்றொரு இடக்கையின் கீழ், இடதுகால்தூக்கி வளைந்து வலதுபுறமாக நீட்டியிருக்கின்றது. மேற்சண்ட இடதுகை இந்த நீட்டிய இடது காலைக் காட்டிக்கோண்டிருக்கின்றது. இந்தத் திருவடியே குஞ்சிதபாதமெனப் பேறுவது. குஞ்சிதம்-வளைவு. இதுவே மீளா இன்பமாகிய முத்திப் பேற்றைத் தந்து உயிர்களை அநுக்கிரகின்ற திருவடிவாம்.

நடராசமூர்த்தியினுடைய திருவுருவம் முழுதும் வட்டவடிவமாய் ஓங்காரமாகிய திருவாசியினுள் விளங்கும். ஓங்காரமாகிய பிரணவத்துள் திருவருட் கூத்தை நிகழ்த்திக்கோண்டு தில்லைக்கூத்தன்விளங்குகின்றான். ‘உய்யுநேறி காட்டுவித்திட் டோங்காரத், துட்போருளை, ஐயனேனக் கருளியவா றார்பேறுவா ரச்சோவே’ என்பது திருவாசகம்

நடராசமூர்த்திக்குரிய நாள்களில் ஆருத்திராதேரிசனநாள் சிறந்தது. அதனால் அவனை ஆதிரையானேன்று ஆன்றோர் கூறினர். அந்நாளில் அவனது அருள்வேளிப்பாடு உயிர்களை மிகுதியாகச் சார்ந்துஇன்புறுத்தும். இவ்வாண்டு ஆருத்திராதேரிசனம் **18-12-56** சேவ்வாய்க்கிழமை. கூற்றம் குமைத்த குரைகழற்கால் கும்பிட்டுத் தோற்றந்துடைத்துச் சுகம்பேறுவோமாக.

——

(9ம் பக்கத் தொடர்ச்சி)

தாம் மறுப்பதற்கு ஏற்ற வகையில் திரித்து வைத்துக்கொண்டு மறுப்பதே அவர் தொழில். சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டு மென்பதற்கான காரணங்கள் பலவற்றை நான் என்புத்தகத்தி லும், இந்தக் கட்டுரையிலும் மிக விளக்கமாகக் காட்டியுள் ளேன். பிற சைவவிற்பன்னருரைகளிலுங் காணலாம். நவீனர் அவற்றைக் கண்டு குணமடைவாராக. அவர் தெரியவேண்டுவன வற்றைத் தெரியவேண்டும். அக்கவலை அவர்க்குச் சிறிதுமில்லை. அச்சிறுமிபோல் அக்கடவுளுக்கு அதுதெரியுமா? இது தெரி யுமா? அதுதெரியாதா? இது தெரியாதா? எனக் கேட்டுக் கொண்டு காலம் போக்குவது பரிதாபகரமான செயல். அச் சிறுமி அவ்வினவைக் கேட்டாள் ஆனால் அப்பாட்டனார்விடை சொல்லவில்லை. ஏன்? விடைசொல்லத்தெரியவில்லை என்பதாலா? அன்று. ஒரு சிறுமி தன் தந்தையைப்பார்த்து அப்பா! நீஎன்னை எப்படிப்பெற்றாய்? என்று வினவக்கூடும். அத்தந்தை விடை சொல்லமாட்டான். பிறகு அது தன் தாயிடஞ் சென்றும் அவ் வினவைக்கேட்கலாம். அவளும் விடைகொடாள். பெற்றோரிரு வரும் மழுப்புவர், பேச்சைத்திருப்புவர் அல்லதுமௌனஞ்சாதிப் பர். அவருக்கு விடைசொல்லத் தெரியாதென்பது காரணமன்று. அங்ஙனமே அப்பாட்டனாருந் தன் பேத்தியின் பேதமையைப் பிறகு பெயர்த்தெரியலாமெனக் கருதியே அப்போது விடை சொல்லாமலிருந்தனரென்க.

'வடமொழியைத் தமிழ்மக்கள் அனைவரும் எந்தக்காலத்திலா வது விளங்கிக்கொண்டு அதில் வல்லவர்களாக இருந்திருக்கிறார் களா? ஒருவர் இருவர் ஒருசிறு குழுவினர் அங்ஙனம் இருந்தி ருக்கலாம். அதைப்பற்றிக் கேட்கவில்லை. அப்படியே இனி எக் காலத்திலாவது தமிழ்மக்கள் அனைவரும் வடமொழியில் வல் லமை பூண்டவர்களாகிவிடப் போகிறார்களா, இன்னும் இலேசா கக் கேட்பதானால் எல்லோர் வழியிலும் என்றைக்காவது வட மொழி நுழையுமா? இதற்கு விடை எல்லோருக்கும் எளிதில் தெரிந்திருந்தாலும்....முன்னாள் இந்திய நீதிமன்ற நடுவர் வர தாசாரியார்... இது குறித்துக் கூறுவதைக் கேளுங்கள். ...அது (வடமொழி) பொதுமக்கள் அறிந்துகொள்ளக் கூடியதாக எப்

போதுமே இருந்ததில்லை. இனி என்றும் இருக்கப்போவது மில்லை' (24-4-56 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். எந்தக் காலத்திலும் சம்ஸ்கிருதத்தில் தமிழரனைவரும் வல்லவராக இருந்திலராம். சரி. அப்படி ஆந்திரரனைவரு மிருந்திருக்கின்றனரா? மலையாளிகளனைவரு மிருந்திருக்கின்றனரா? வங்காளிகளனைவரு மிருந்திருக்கின்றனரா? குஜராத்திகளனைவரு மிருந்திருக்கின்றனரா? அம்மொழியை அனைவருமென்ற கணக்கில் படித்தவர் அங்குமில்லை, இங்குமில்லை, எங்குமேயில்லை. எந்தப் பிரதேசத்திலும் அதைப் படித்தவர் அவ்வக்காலை மக்களுட் சிலர்தான். இங்கும் அவர் அன்னரே. அங்ஙனமாக அனைவருங் கற்றிலரென்பதைக் காரணமாக வைத்துக்கொண்டு மற்றைப் பிரதேசங்களுக்குரியார் அதனைத் தமக்கயலெனக் கருதி ஒதுக்கியிருக்கின்றனரா? இல்லை. தமிழர்மாத்திரம் எப்படி யொதுக்கலாம்? அன்றியும் அதற்குச் சொந்தக்காரரென ஒரு கூட்டத்தாரை நவீனர் சுட்டுவர். அக்கூட்டத்தாராவது அதனை அனைவருமென்ற கணக்கில் கற்று வல்லராயிருந்திருக்கின்றனரா? அதுவுமில்லை. அதனால் அவரும் அம்மொழியை யொதுக்கவேண்டுமோ? தொல்காப்பியர் காலமுதல் இன்றுவரை இங்கு அவ்வப்போது வாழ்ந்துவந்த தமிழரனைவருந் தமிழையாவது கற்று வல்லராயிருந்தனரா? ஆமெனின், 'கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையவர் கல்லா தவர்' என்பது போன்ற அறிவுரைகள் அக்காலத்திலேயே தோன்றற் கவசியமில்லை. தமிழை எழுதப்படிக்கப் பேசக் கற்றுக்கொண்டவன் அவ்வளவில் வள்ளுவர் கூறும் இலங்குநூல் கற்றவனாய்விட்டான். ஒன்றிரண்டு வயதிலிருந்தே பழகுவதாற் பேச்சு வரும். தற்குறியும் பேசுவான். அதுகொண்டு அவன் கற்றவனாகான். ஊமைக்கு உளறுவாயன் சண்டப்பிரசண்டன்' 'வெறுங் கழுத்தோடிருப்பதைவிட அரைப்பணத் தாலியோடிருப்பது மேல்' என்பன பழமொழி. அதுபோல் ஒருவன் தற்குறியா யிருப்பதைவிட எழுதப் படிக்கவாவது கற்றுக்கொள்வது மேல். அதற்காவனவற்றை அரசாங்கம் செய்துவருகிறது. அக் கல்வியினரும் இலங்குநூற் கற்றார் கூட்டத்திற் சேருந் தகுதிபெறுர்.

(தொடரும்)

(7ம் பக்கத் தொடர்ச்சி)
திராவிடருக்கும் எப்படிச் சண்டை நடந்தது என்பதை எடுத்துரைக்கும் உண்மைகள். :-ஈ-வே-ரா.

பார்ப்பான் சொன்னால் பொய். திராவிடன் சொன்னால் மெய். பார்ப்பனர்களை எந்த விஷயத்திலும் யாரும் நம்பக்கூடாது :-ஈ-வே-ரா. என்சொந்த விஷயத்திலும் ஆச்சாரியரிடமே ஆலோசனை கேட்பேன்:- ஈ-வே-ரா. சொந்தவிஷயத்தில் பார்ப்பனனை நம்பு.

தேர்தலில் போட்டியிடமாட்டோம். பதவி நாற்காலிகளைப் பிடிக்கமாட்டோம். ஏனெனில் அயோக்கியர்களே தேர்தலில் போட்டியிடுபவர். :- ஈ-வே-ரா.

தேர்தலில் நான் குறிப்பிடுகிற ஆசாமிகளைச் சட்டசபைக்கு மக்கள் அனுப்பவேண்டும். .-ஈ-வே-ரா. தேர்தலில் நிற்பவர்கள் அயோக்கியர்கள். அயோக்கியர்களில் சிலரை ஜெயிக்க வைப்பவர்கள் திராவிடர்கள்.

முதலாளிகளை ஒழிக்கவேண்டும். :-ஈ-வே-ரா. முதலாளிகளை எதிர்ப்பது அயோக்கியத்தனம். :-ஈ-வே-ரா. முதலாளிகளை ஒழிப்பது புரட்சி. எதிர்ப்பது அயோக்கியத்தனம். :-ஈ-வே-ரா.

சுரண்டலை ஒழிப்பது உயர்ந்த லட்சியம். எதிர்ப்பது அயோக்கியத்தனம் பகுத்தறிவை வளர்ப்பதுதான் நான்செய்கிற வேலை. பகுத்தறிவை வளர்த்துக்கொள்ளுங்கள். :- ஈ-வே-ரா.

பகுத்தறிவினால் என்னிடம் கேள்வி கேட்பவர்கள் என் கழகத்தில் இருக்கவேண்டியதில்லை. ஏன் என்று கேட்பவர்களுக்கு என்னிடம் வேலையில்லை. :- ஈ-வே-ரா. பகுத்தறியச்சொல், பகுத்தறிவு இருந்தால் பகை.

## கனி எண்ணெய்த் திட்டம்

இரண்டாவது திட்ட காலத்தில், நாட்டில் கனி எண்ணெய் ஊற்றுக்களைக் கண்டு பிடிப்பதற்காக, மொத்தம் 30கோடி ரூபாய் செலவு மதிப்புள்ள திட்டமொன்றை இந்திய சர்க்கார் தயாரித்திருக்கின்றனர்.

## உங்களுக்குத் தெரியுமா?

குடிசைத் தொழில், சிறு தொழில் ஸ்தாபனங்களிடமிருந்து, இந்திய சர்க்கார் 1955-56ம் ஆண்டில் மொத்தம் 341.14 லட்சம் ரூபாய்க்குச் சாமான்களை வாங்கினர். அதற்கு முந்திய வருஷத்தில் அவர்கள் வாங்கிய சாமான்களின் மொத்தமதிப்பு 105 லட்சம் ரூபாய்தான்.

இந்திய ரயில்வேக்கள் 1955-56ம் ஆண்டில் வெளிநாடுகளிலிருந்து மொத்தம் சுமார் 15.68 கோடி ரூபாய்க்கு சாமான்கள் வாங்கினர்; அதே வருஷத்தில் மொத்தம் சுமார் 99.57 கோடி ரூபாய் பெறுமான சாமான்களை இந்தியாவில் வாங்கியிருக்கின்றனர்.

இந்தியாவில் காஸ்டிக் சோடா உற்பத்தி 1946ல் மொத்தம் 2,900 டன்னாக இருந்தது, 1955ல் 34,250 டன்னாக உயர்ந்துவிட்டது.

வெளிநாடுகளில் கல்வி பயிலுவதற்காக இரண்டாவது திட்டகாலத்தில் பிரதி வருஷம் பன்னிரண்டு ஷெட்யூல்ட் வகுப்பு மாணவர்களுக்கு சர்க்கார் உபகாரச்சம்பளம் அளிக்கப்படும். 1954-55ல் ஆறுமாணவர்களுக்குத்தான் சர்க்கார் உபகாரச் சம்பளம் வழங்கப்பட்டது

தபால் தந்தி இலாகா ஊழியர்களின் உபயோகத்துக்காக சர்க்கார் கட்டியிருக்கும் வீடுகளின் மொத்த எண்ணிக்கை 1956 எப்ரலில் 8,412 ஆக இருந்தது. நாடு பிரிவினை செய்யப்பட்டபோது மொத்தம் 6,212 வீடுகளே இருந்தன

குறைந்த வருமானத் தொகுதியினருக்கு வீடுகட்டிக் கொடுக்கும் திட்டத்தின்கீழ் யூனியன் சர்க்கார் 1954 நவம்பரில் இத்திட்டம் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து இதுவரையில் பல்வேறு ராஜ்யங்களுக்கும் கடன்தொகைகளாக மொத்தம் சுமார் 12.74 கோடி ரூபாய் கொடுத்துள்ளனர்

# குன்றக்குடி மடாதிபதிக்குக் கண்டன அறிக்கை.

நாத்திகத் தலைவர்களுக்குப் பூரணகும்பம் வைத்து நல்வரவேற்பு உபசார மரியாதைகள் நடத்தியும் பொன்னுடைபோர்த்தியும் கௌரவிக்கும் நாத்திக வளர்ப்புப் பிதாவாகக் குன்றக்குடி மடத்தில் வந்து முளைத்திருக்கும் உமக்கு, 'திருக்கயிலாய பரம்பரை திருவண்ணாமலையாதீனம் தெய்வசிகாமணி' யென்ற சிறப்புப் பெயர் இனிமேற் பொருந்தாது. முதல்வருடைய இயலுக்கு எவ்வகையிலும் மாறுபடாமல் ஒன்றிலயப்பட்டு நிற்பவர்களே கயிலாய பரம்பரை யென்று சொல்லிக்கொள்ளத் தகுதிவாய்ந்தவர்கள் தெய்விகப் பெருஞ்சிறப்பையுடையவரென உலகம் மதிக்கும் தெய்வசிகாமணி யென்னும் ஆதீன முதற்குரவர் பெயரை நீர் உபயோகிப்பது தெய்வசிகாமணியாரை யாதிகாகக்கொண்டு உமக்கு முன்னதாக நாற்பத்துநான்கு பட்டம்வரை இருந்துவந்த பெரியோர்களின் கொள்கைக்கு முழுதும் புறம்பாயுள்ள உமக்குப் பொருந்தாது. இவ்வாறு மரபு தவறியொழுகும் தகுதியற்றவரொரு பெயரளவில் மட்டும் முன்னோர்களது சிறப்பை மேற்கொண்டு அந்த மரபில் தான்தோன்றியவரெனக்காட்டிக்கொண்டால் அவரைத்தான் உலகம் தான்தோன்றித் தம்பிரான் எனக் கூறும் அவ்வாறான வுமது நிலையையுணர்ந்து வெறுப்புக்கொண்டவர்கள் பொருட்டு நீர்விடுத்த அறிக்கையில் நாத்திகர்களை வசப்படுத்தவே இம்மாதிரியான செயல்களிலிறங்கியுள்ளோம் எனக் கூறுவது உண்மையானால் நாத்திகர்களின் தாக்குதலுக்கு இலக்காயிருக்கும் புராண இதிகாசங்களையும் உருவ வழிபாடுகளையும் அவர்கள் இழிவுசெய்யாதிருக்கும்படி எவ்வாறு உண்மை விளக்கம் காட்டியிருக்கிறீர்? அல்லது காட்டப்போகிறீர்! உமதுசொல்லில் உண்மையிருக்குமானால் அவ்வகையிற்றான் உமது திறமையைக் காட்டவேண்டும் அப்படிக்கில்லாமல் வேறுவகையிற் செய்யும் முயற்சிகளெல்லாம் ஊரை ஏமாற்றப்பார்ப்பதுதான். உம்முடைய வெறும் பேச்சாலும் பசப்பு மொழியாலும் நாத்திகர்களை ஏமாற்றவோ திருத்தவோ முடியாது. உண்மையான ஆத்திகர்களிடத்தும் அவை செல்லா. இதனை உலகறிய நிரூபிக்க எம்மால் முடியும். யாம்மட்டுமல்ல; மெய்யுணர்வுடைய அன்பர்கள் பலர்

உம்முடைய பொய்ப் பகட்டுகளை அழிக்கக் காத்திருக்கிறார்கள் அதற்குப் பொதுஇடத்தையும் செய்தித்தாளையும் கைக்கொள்ளத் தயாராகவுள்ளோம் திருத்தொண்டர்களுக்கு வன்றொண்டனும் புறம்பு அவனையாண்டசிவனும்புறம்பு எனத் தம்பிரானையும் தம்பிரான் தோழரையும் கூறிய விறன்மிண்டர் மரபில் வாழையடிவாழையென வந்துகொண்டிருக்கின்ற திருத்தொண்டர்கள் என்றென்றும் உண்டு. அவர்கள் புனிதமாகிய தெய்வ சிகாமணியின் திருப்பெயருக்குக் களங்கம் ஏற்படும்படி ஒருநாளும் விட மாட்டார்கள். நெறிதவறிய வேடதாரிகளைக் கண்டிக்கும் அதிகாரவுரிமை அவர்களுக்கு உண்டு. அந்த முறையிற்றான் இந்தக் கண்டன அறைகூவலறிக்கையும் வருகிறது. இனிமேலாவது சிந்தித்துப் பார்த்துத் திருந்துவீரா?

இங்ஙனம், தேவகோட்டை சன்மார்க்க சங்கத்தலைவர்

'வைத்தியமணி' சித. வே. ஷண்முகநாதபிள்ளை

# தசவாயுக்கள்

வைத்தியமணி சித. வே. சண்முகநாதபிள்ளை

பிராணன்

மூலத் துதித்து முடியன வெழும்பி
நாசி வழிமூ நான்காய்க் கழிதரும்
காலங் குலத்தால் நாளைக் குறைக்கும்

அபானன்

உந்தியின் கீழ்நின் றுறுமி மலசலம்
கழியக் கீழ்முகக் கதியைக் கொடுக்கும்

வியானன்

உடற்பொருத் தனைத்தினும் உற்றுநின் றுங்கெலாம்
களைப்பும் தவனமும் காட்டுந் தொழில்செயும்

உதானன்

உதரத் துள்நின் றுண்ணுன வினையெலாம்
ஊட்டி நரம்பில் உடலை வளர்க்கும்

சமானன்

கருவிகள் அனைத்தினுங் கலந்துமின் றமைந்து
தன்னிலை மீறாது சமஞ்செய் திருக்கும்

கூர்மன்

கண்க ளிரண்டிலும் கலந்து விழிப்பும்
இமைப்பும் ஒளியில் இலங்குத லும்செயும்

நாகன்

தொண்டையுண் ணின்று தொடர்புறு விக்கலும்
கொட்டாவி கெட்டியும் கொள்ளச் செய்யும்

கிரிகரன்

மொளிப்பூட் டனைத்தினு முற்று நீட்டவும்
முடக்கவு மான முயற்சியைச் செய்யும்

தேவதத்தன்

ஓசை விளக்கும் உறுதொழில் செய்யப்
புழைஅங் கந்தோறும் புகுந்திருக்கும்

தனஞ்செயன்

பூட்டு விடாதகம் பொருந்தியாத்து
வீந்தபின் னுடலம் வீங்கமூன் றாம்நாள்
கபாலம் வெடிக்கக் கடந்து செல்லும்
வாயுபத் தின்தொழில் வகைமுறை இதுவே.

---

# படித்தோம்!

பரார்த்த சிவாலய நித்திய பூஜா ஸங்க்ரஹம்:- திருச்செந்தூர் ஸ்ரீ ஆலாலசுந்தரர் சிவாசாரிய சங்க வெளியீடு. மூலாகம பத்ததிகளான பல பிரதிகளை வைத்துக் கண்டனூர் சிவாகம விற்பன்னரும் சைவக்கிரியா ஞானபானுவுமாகிய சிவஸ்ரீ அரு. இராமநாதக் குருக்களவர்களால் எழுதப்பெற்றது. உஷக்காலம் முதல் அர்த்த சாமம் வரை செய்யவேண்டிய கிரியைகளை அவ்வவற்றிற்குரிய விளக்கங்கள், மந்திரங்களுடன் பாடப்புத்தக முறையில் இதனை வெளியிட்டுள்ள சிவாசாரியர் சங்கத்தின் உதவி பாராட்டுதலுக்குரியதாகும்.

# 'மறுமணத்தின் எதிரொலி'

சித-சேதுராமன்

**சுந்தரம்பிள்ளை:** நான் அமைதியிழந்த உள்ளத்துடன் போராடிக்கொண்டிருந்தேன். என் உள்ளம் என்னைப் பலவித எண்ணங்களில் இழுத்துச்சென்றது. மறுமணம்...மனைவி மீனாட்சியின் பதவிக்கு மற்றொருத்தியா....சே! சே! கூடவே கூடாது. ஏன்கூடாது? நானென்ன முற்றும் துறந்த முனிவனா? எத்தனை நாட்களைத்தான் தனிமையில் கழிப்பது? பெண் ணில்லா இல்லம் நிலவில்லா வானம்தானே! 'பணம் இருக்கிறது. ஏன் மறுமணம் செய்துகொள்ளக்கூடாது?'' என்று என்னைப் பார்த்து என்னுள்ளம் நகைத்தது அதுவும் சரிதானே! மறு மணத்திற்கென ஏற்பாடுசெய்தேன் ஒரு இளநங்கையை. ஆனால் அவள் ஏழை. ஏழைதானே வயதானவர்களுக்கு மறுதாரமாக வரச் சம்மதிப்பாள். எனக்கு மகிழ்ச்சிதரும் இச்செய்தியை என் மகன் சேகரனிடம் கூறினேன். ஆனால், அன்னையின் பிரிவால் வெந்துகிடக்கும் அவன் 'மகனின் மணக்கோலத்தைக் கண்டு மகிழவேண்டிய தங்களுக்கு மறுமணமா? வேண்டாம் இவ் விப ரீத விளையாட்டு. கன்னியின் வாழ்வைக் களங்கப்படுத்த வேண் டாம். குமரியின்வாழ்வைக் கொடுமைப்படுத்தவேண்டாம்' என்று மாற்றம் உரைத்தான். ஆத்திரத்தால் நான் அவனைவீட்டைவிட்டு வெளியே துரத்தினேன்.

**கனகம்:** நானோ நெற்றிவேர்வை நிலத்தில் விழ உழைத்து உழைத்து உருக்குலைந்த ஒரு ஏழை விவசாயியின்மகள். வறுமை யின் கொடுமையாலும், கடனின் தொல்லையாலும், தள்ளாத வயதினாலும் எனது தந்தை இவ்வூர் மிராசுதாருக்கு என்னை மணமுடித்துக்கொடுக்கமுற்பட்டார். எப்படிப் பொருந்தும் இந்த ஒப்பந்தம். அவரோ வாழ்வின் இறுதிப்படிக்கு எட்டிக் கொண்டி ருக்கிறார். நானோ வாழ்க்கையின் முதற்படியில் நிற்கிறேன். கட் டிளங்காளையுடன் வாழ்வு நடத்தவேண்டிய நான் தள்ளாத மனி தருடன் எப்படி வாழமுடியும்? பிணியாலும் ...களின் மணத்தை காணவேண்டும் என்ற ஆவலாலும் தவித்த என் தந்தையின் விருப்பத்திற்கு ஏமாற்றமளிக்க விரும்பாது திருமணத்திற்குச்

சம்மதித்தேன். திருமணமும் சிறப்பாகத்தான் நடந்தேறியது. என்னஇருந்தாலும் நான் பருவமங்கைதானே! என் கழுத்திலே இருந்த மாங்கல்யம்தூக்குக்கயிறாகவும், கண்முன்னே காட்சியளிக்கும் பொருள்கள் அனைத்தும் சீறிவரும் நச்சுப்பாம்புகளாகவும், செந்தேள்களாகவும் தோன்றின. அவரின் தோற்றமோ உயிரைப்போக்கவரும் கூற்றுவனாகத் தென்பட்டது. குமுறிக் கொந்தளிக்கும் என் உள்ளம் வாழ்வின் முதல் நாளையே முடிவு நாளாக்கியது.

**சேகரன்:** இரக்கமற்ற பணக்காரக் கும்பலின் மத்தியிலே தோன்றினேன் நான். மூடநம்பிக்கைக்கும் பழமைக்கும் தவறான போக்குக்கும் முற்றுப்புள்ளி வைத்து சமூகத்தைச் சீர்படுத்த வேண்டுமென்பதே என் அவா. ஆனால் என் தந்தையோ அற்ப ஆசைகொண்டு ஒரு மங்கையின் வாழ்வை மாசுபடுத்த முயன்றார். பொறுக்குமா என்னுள்ளம்? தகாதென்று எடுத்துரைத்தேன். வீட்டைவிட்டு வெளியேயும் துரத்தப்பட்டேன். வயிற்றுப் பிழைப்புக்காக வேலைதேடி அலைந்தேன். சீரழிந்தவர் சென்னை சென்றால் சிறப்புடன் வாழலாம் என்ற கூற்றும் என்வாழ்வில் பொய்த்தது. நாளெல்லாம் நடந்து நடந்து மெலிந்தேன். நாட்கள்பல சென்றன. அன்றொருநாள் நள்ளிரவு. மழை கடுமையாகப்பெய்துகொண்டிருந்தது. குளிரால் நடுங்கிய உடலோடு ஒரு பாங்கியின் மூலையில் தங்கினேன். யாரோ ஒருவன் திருடிச் சென்ற குற்றத்திற்காகப் போலீசார் என்னைக் கைது செய்தனர். என் காலடியில் சிதறிக்கிடந்த நோட்டுக்கள் என்னைப்பார்த்து ஏளனம் புரிந்தன.

**சுந்தரம்பிள்ளை:** கனகமோ கண்காணாத இடத்திற்குச் சென்றுவிட்டாள். எவள் என் வாழ்க்கைத் துணைவியாக—இல்லத்தரசியாக இருப்பாள் என்று நினைத்தேனோ அவள் பெண்ணாசை பிடித்துத் திரிந்த என்மனதைத் திருத்திவிட்டு எங்கோ சென்றுவிட்டாள். வாழ்வில் ஏமாற்றமும் வெறுப்பும் அடைந்த நான் சொத்தையெல்லாம் கனகத்தின் குடும்பத்துக்கு எழுதி வைத்துவிட்டு ஏகாந்தமாகக் கிளம்பிவிட்டேன். ஆனால் ஒரு ஆசை.

(தொடரும்)

# செட்டிநாடு

திங்கள் இருமுறை

சமய வளர்ச்சி, மொழியாக்கம் கருதி உழைப்பது.

மலர்-26]  துன்முகி-மார்கழி-13  27-12-56  [இதழ்-5

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன் செட்டியார்


## திருவெம்பாவை

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே! வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதா ரமளியின்மேல் நின்றும் புரண்டிங்னன்
ஏதேனு மாகாள் கிடந்தாளென் னேஎன்னே
ஈதேயெந் தோழி பரிசேலோ ரெம்பாவாய்.

:—மணிவாசகர்


ஒவ்வொரு இரண்டாவது நான்காவது
வியாழக்கிழமைகளில் வெளிவரும்.




# நெய்தல்

தலைவன் மணம்புரிந்து கொள்ளாது களவொழுக்கமே கொண்டு நெடுங்காலமாக வந்து போவதற்காற்றாத தலைவி தோழியை நோக்கி உள்ளுறையால் வரைந்து இல்லறம் நிகழ்த்துமாறு கூறியது.

கடலங் காக்கைச் செவ்வாய்ச் சேவல்
பருவ மகளிர் கோடிகோய் தழித்த
பொம்ம லரும்பின் வெண்மண லொருசிறைக்
கருஞ்சூல் வதிந்த காமர் பேடைக்
கிருஞ்சேற் றயிரை தேரிய தெண்கழிப்
பூவுடைக் குட்டங் துழவுந் துறைவ
னல்கா மையி னசைபழு தாகப்
பெருங்கை யற்றவென் சிறுமை யலர்வா
யம்பன் மூது ரலர்தந்து
நோயா கின்றது நோயினும் பெரிதே 276

:-மூக்கல், ஆசான்நல்வெள்ளையார்

கடலில்வாழ்கின்றநீர்க்காக்கையிற் சிவந்தவாயையுடையஆண் காக்கையானது நோன்பையுடைய பெண்மக்கள் கொடிகளைக் கொய்தலால் அழிபட்ட நெருங்கிய அடும்பின் கொடியையுடைய வெண்மையாகிய மணற்பரப்பின் ஒருபக்கத்தில் முதிர்ந்த சூலுடன் இருக்கின்ற விருப்பமுள்ள பேடைக்குக் கருமையான சேற்றிலேயுள்ள அயிரைமீனைத் தெரிந்தெடுக்கவேண்டித் தெளிந்த கழியிலே பூவுதிர்ந்த ஆழமான இடத்தைத் துழாவுகின்ற துறையையுடைய கொண்கன் வந்துகூடித் தலையளி செய்யாமையால் எனது விருப்பம் பழுதாகிவிட அதனாற் செயலழிந்தவெனது பெரிய நோயானது அலர் கூறுகின்ற அம்பலையுடைய நமது பழயவூரால் அறியப்பெற்று முன்னைய நோயினும் மிக்க நோய் உடையதாகின்றது.




# மாலொருபாகன்

செல்வி, வயிநாகரம்.
இராம. மீனுட்சி



சங்கரநயினர்கோயில்
ஆருத்திராதெரிசன விழாவில்
17-12-56ல் பேசியது



பரங் கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான், அடியார்களை ஆட்கொள்ளக் கொள்கின்ற திருவுருவங்களும் அருட்செயல்களும் அளவில் அடங்காதனவாகும். அவ்வாறு அவன் கொள்ளுகின்ற திருவுருவங்கள் பலவற்றில் மாலொருபாகனுக இருப்பதும் ஒன்று. இத்திருவுருவத்தைத் திருமுறைகளிற் பல இடங்களில் ஆசிரியர்கள் பாடிப் பரவியுள்ளார்கள்.

தமிழ்நாட்டில் மாலொருபாகனுகிய கடவுள் சங்கரநாராயணர் என்ற திருப்பெயரோடு எழுந்தருளியிருப்பது, சங்கரன்கோவில் சங்கரநாராயணர்கோவில், சங்கரநயினர்கோவில் எனவழங்கும் இந்தத் திருத்தலத்திலேயாகும்.

இத்தலத்துப் புற்றிடங்கொண்ட பெருமானை ஓர் 'புலையன்' முதன் முதலிற்கண்டு, 'உக்கிரபாண்டியமன்னன்'னிடம் தெரிவித்தானென்பர். இப்புலையனுக்கு ஊரின் தென்பகுதியில் ஓர்கோவில் இருப்பதை யாவருமறிவர். இத்தலத்திலுள்ள சிவாலயம், உக்கிரபாண்டிய அரசர்பெருமானல், இற்றைக்குச் சற்றேறக்குறைய 950 ஆண்டுகட்கு முன்னர் கட்டப்பெற்றது. இங்குள்ள பல திருப்பணிகள், சீவலமாறபாண்டியன் என்னும் அரசனல் செய்யப்பெற்றிருக்கின்றன. இவன், 'சீவலமாறனேந்தல்' என்னும் ஓர் ஊரையும், அதனேடு சேர்ந்த பலஊர்களையும் இக்கோவிலுக்கு

'இறையிலி' யாகக் கொடுத்திருக்கிறான். இவனால் இனிய செந்தமிழ்ப் பாக்களால் அமைந்த 'புராணம்' இத்தலத்துக்குச் செய்யப்பெற்றிருக்கிறது.

கோவிலுக்குள் இருக்கும் 'நாகசுனை' என்னும் தீர்த்தம் 'சங்கன், பதுமன்' என்னும் இரண்டு நாகர்களால் பிரதிட்டை செய்யப்பெற்றது. இதில் முழ்குவோர் இம்மையில் எல்லாத்துன்பங்களும் நீங்கி இன்பம் பெறுவதன்றி, மறுமையிலும் மாண்பையடைந்து வாழ்வர். இத்தீர்த்தத்தின் மாட்சி, இன்றும் சென்று மூழ்குவோர் பாராட்டுவதால் அறியலாம். இதில் நண்டு, தவளை முதலிய நீர்வாழ் பிராணிகளே இல்லை.

இங்குள்ள பெருமானின் திருநாமம் 'சங்கரலிங்கம்' என்பதாகும். இவருக்கு 'வைத்தியநாதர், கூழைநாதர்' ஆதிய பெயர்களும் உண்டு. அம்மையார் திருநாமம் 'கோமதி' என்பதாகும். இவருக்கு 'ஆவுடைநாயகி' ஆதிய பெயர்களும் உண்டு. 'சங்கரநாராயணர் ஆலயம்' அப்பனுக்கும் அம்மைக்கும் நடுவே இருப்பது, இத்தலத்தில் அப்பெருமானுக்குரிய சிறப்பை விளக்குவதாகும்.

சங்கரலிங்கப்பெருமான், புன்னைமர நீழலில், புற்றிடங்கொண்ட பெருமானாக விளங்குகின்றார். அணிமையில் உள்ள 'தாருகாபுரத்தை' அப்புத்தலமாகவும், 'திருக்கருவைநல்லூரைத் தேயுத்தலமாகவும்' தென்மலையை வாயுத்தலமாகவும், 'தேவதானத்தை' ஆகாயத்தலமாகவும் கொண்டபெருமான், இதனைப் பிருதிவித்தலமாக ஏற்றருளி விளங்குகின்றார். இவர் உறைகின்ற புற்றுமண்ணை உண்டவர் எல்லா நோய்களும் நீங்கப்பெற்று இன்பமடைவது 'கண்கூடு'

கோமதி அம்மையார், 'எல்லா உயிர்களையும்உடையாள்' என்னும் பொருளைத்தரும் திருப்பெயரோடும், கண்கவர் திருவுருவப்பொலிவோடும் இங்கே விளங்குகின்றார். அம்மையின் திருமுன்னர், நிலத்தில் ஒரு 'மந்திரச்சக்கரம்' இருக்கிறது. இது திருவாவடுதுறை ஆதீனத்தில் பத்தாவது குருமகா சந்நிதான

மாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ வேலப்ப தேசிக மூர்த்திகளால் பிரதிட்டை செய்யப்பெற்றது. அம்மையின் திருநோக்காலும், இச்சக்கரத்தின் வலிமையாலும், இதனருகில் வருகின்ற "பேய், பைசாசம்" முதலியன பற்றினரை விடுத்துப் பறந்தோடுவதை இன்றும் காணலாம். அம்மையை நினைந்து நேர்ந்துகொண்டால் தீராத பிணிகளெல்லாம் தீருகின்றன.

'சங்கரநாராயணர் திருவுருவம்' வலப்பாதி இறைவனும், இடப்பாதி திருமாலுமாக அமைந்தது. 'உலகெலாம் ஈன்றும் உண்ணு முலைக்கன்னி'யாக விளங்கும் அம்மையார், ஆண்டவனை நோக்கி, 'இடப்பாதி மாலுக்களித்த எழிலுருவக்காட்சியைக் காணவேண்டு'மென வேண்டப், 'பூவுலகத்துப்பொதிகையின் அருகிலுள்ள புன்னைவனத்தலத்திற் சென்று, தவமியற்றுவாயானல் நீ விரும்பும் காட்சி தருவோம்' என இறைவன் கட்டளையிட, அவ்வாறே அம்மையார், ஆயிரம் ஆண்டுகள் தவம் நோற்றுக் கண்ட திருவுருவமே, இந்த சங்கரநாராயணராக நமக்குக் காட்சி தருகின்றது.

நாகலோகவாசிகளாகிய 'சங்கன், பதுமன்' என்னும் இருவரும் 'சிவனே பெரியவன், திருமாலே பெரியவன்' எனப் போராடி, முடிபு காண முடியாதவர்களாய்ப் பதஞ்சலி முனிவரிடம் பன்னூல்களும் கற்று, அத்திரிமுனிவர், தேவேந்திரன், வியாழபகவான் ஆதியோரிடம் தங்கள் ஐயத்தைத் தெளிவிக்க வேண்டி, இறுதியில் இத்திருத்தலத்திற்கு வந்து தங்கள் பெயரால் 'நாக சுனை' என்னும் ஒரு தீர்த்தம் உண்டாக்கிச், சங்கரலிங்கப்பெருமானையும் கோமதி அம்மையாரையும் வழிபட்டுத் 'தங்கள் ஐயத்தை நீக்கியருளவேண்டு'மென்று ஆண்டவனை வேண்ட, ஆண்டவன் முன்னர் அம்மையாருக்குக் காட்டிய சங்கரநாராயணத் திருக்கோலத்தைக் காட்டித், 'திருமாலின் வேறல்லாத தனது சிறப்பை விளக்கியருளி' அந்நாகர்களின் வேண்டுகோட்படி, அம்மையாருக்கும், அவர்களுக்கும் காட்டிய 'மாலொரு பாகத்துவடி'வோடு, வழிபடுவோர் வருத்தந்தீர்க்க இன்றும் காட்சிதந்து வருகின்றார்.

மணலூரிலிருந்து பாண்டியநாட்டை ஆண்ட 'உக்கிரபாண்டியன்', இத்தலத்தை வழிபட்டுப் பணிகள் பலசெய்து, பேரானந்தப்பெருவாழ்வு அடைந்தான்.

அந்தணர் குலத்துதித்த 'தக்கணை' என்னும் மங்கை, ஊழ்வினையால் அடைந்த துன்பங்களுக்குக் கவன்று, இத்தலத்தை அடைந்தபொழுது கவலைநீங்கி மகிழ்வடைந்து தவஞ்செய்து முத்திபெற்றாள்.

'கலிங்கத்துப்பரணி'த் தலைவனாகிய 'அகளங்கன்', இரந்துண்ட பாவத்தால் வந்த நடுக்கநோய் தீர்தற்பொருட்டு, இத்தலத்திற்கு வந்து வழிபட்டுச் 'சிவசருமன்' என்னும் அந்தணனால், இத்தலச் சிறப்பு, திருநீறு, உருத்திராக்கம்,ஐந்தெழுத்து,சிவபூசைச் சிறப்புக்கள் உபதேசிக்கப்பெற்றுத் தவவாழ்க்கை மேற்கொண்டு சாயுச்சியமடைந்தான்.

தேவேந்திரன் மகனாகிய 'சயந்தன்' இராமனால் காக்கையுரு நிலைக்கும்படி பெற்ற சாபம் நீங்குதற்பொருட்டு இத்தலத்திற்கு வந்து இந்திரன் அளித்த 'முத்துமாலையை' இறைவனுக்குச் சாத்தி வழிபட்டுக் காக்கையுரு நீங்கப்பெற்றான்.

'கானவன்' என்னும் வேடுவன் இத்தலத்தை அடைந்தபொழுது உண்டாகிய மயக்கம், நாகசுனை நீர் தெளிக்கப்பெற்றதும் நீங்கிச் சாயுச்சிய பதவியை அடைந்தான்.

இன்னும், இத்தலத்தை வழிபட்டுப் பேறு பெற்றோரும், பெறுகின்றோரும் பெறுவோரும் பலர் என்று கூறி இம்மட்டில் அமைகின்றேன்.

நலம் பெருகுக!

## மோட்டார் வண்டிகள் உற்பத்தி

1956ல் முதல் ஆறுமாதகாலத்தில், இந்தியாவில் மொத்தம் 4182 டீசல் மோட்டார் வண்டிகள் உற்பத்தி செய்யப்பட்டன

## குருபூசை விழா

சுசீந்திரம் திருவாவடுதுறை மடத்தில் பரிபூரணமாயிருக்கும் 6-வது குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ குமாரசுவாமி தேசிகரின் குருபூசைவிழா பூசை, மகேசுவரபூசை சொற்பொழிவுகளுடன் 6-12-56ல் நடைபெற்றது. மகாவித்துவான் ஆறுமுகநாவலர் தலைமையில் தசாவதானி ஆறுமுகம்பிள்ளை, அட்வகேட் சி. வள்ளிநாயகம்பிள்ளை, வித்துவான் பகவதிப்பெருமாள்பிள்ளை ஆகியோர் குருபூசைகளின் பெருமைகளைப் பற்றிப் பேசினர். தலைவர் முடிவுரைக்குப்பின் தேவாரம், விசேஷ பூசைகளுடன் குருபூசை சிறப்புற முடிவுற்றது. நண்பகலில் திருமடத்தில் 600க்கு அதிகமான மக்களுக்கு உயர்ந்த முறையிலான உணவளிக்கப்பட்டது.

---

## நோட்டீஸ்

புதுக்கோட்டை சப்கோர்ட்

S. C. No 192 of 56

Dr, T. P. கிருஷ்ணஸ்வாமி அய்யர் —வாதி

பெ. மு. முருகப்பன்செட்டியார் son of முத்துக்குமரன்செட்டியார் செட்டிவிடுதி, முள்ளங்குரிச்சிவட்டம், ஆலங்குடி தாலுகா —பிரதிவாதி

பிரதிவாதிக்குத் தெரிவிப்பதாவது:— உங்கள் பேரில் pronoteபடி ரூ 815-0-0ம் பின்வட்டி வகையரு கிடைக்க தொடரப்பட்டிருக்கும் ஷை தாவா, விசாரணைக்கு ஷை கோர்ட்டில் 7—1—57க்கு டயம் ஏற்பட்டிருக்கிறது. அன்று காலை 10—மணிக்கு நீங்கள் ஷை கோர்ட்டில் ஆஜராகி கக்ஷிகளைத் தெரிவித்துக்கொள்ள வேண்டியது, தவறினால் கிரமப்படி மேல் நடத்தப்படும்.

புதுக்கோட்டை
18-12-56

K. S. கிருஷ்ணஸ்வாமி
வாதிவக்கீல்

# கவிதை



## வண்டும் - மலரும்

'இரட்டையர்', வே. அண்ணாமலை

1. புலர்வதன் முன்னே வந்து
போதினில் வட்ட மிட்டு
மலர்மது உண்ண எண்ணி
மாநிற வண்டு மொய்க்கும்;
பலர்வந்து பறிக்கு முன்னே
பயன்பெறும் வண்டைக் கண்டு
நலமிகு மலர்கள் எல்லாம்
நாணியே சிரித்து நிற்கும்.

2. சிரித்திடும் மலரில் உள்ள
தேனினை எல்லாம் வண்டு
விரித்திடும் குழலை நீட்டி
விருப்புடன் உண்ட தற்பின்,
உரித்திடும் கனியின் தோல்போல்
உதறிவிட் டோட எண்ணி
விரித்திடும் இறக்கை கண்டு
வெம்பிடும் மலர்கள் எல்லாம்·

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

எந்தக் காலத்துத் தமிழரும் அனைவருமென்ற கணக்கில் இலங்குநூற் கல்விமான்களா யிருந்திலர். பெரும்பாலரென்ற கணக்குங்கூடச் சொல்லமுடியாது. இன்றும் நிலை அதுதான். 'ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாம்புலவர் வார்த்தை பதினாயிரத் தொருவர்' என்ற பழந்தமிழ்ப் பாட்டையுங் காண்க. எழுதப் படிக்கத் தெரிந்த தமிழருள்ளேயே தொல்காப்பிய முதலிய இலக்கணங்களும், சங்க இலக்கியங்களும், சைவசித்தாந்த சாத்திரங்களும் எத்தனைபேர் கற்று வல்லரா யிருக்கின்றனர்? அவற்றையுங் கற்றுவல்லரர் சம்ஸ்கிருதத்தை எழுதப்படிக்கவாவது கற்க மாட்டாரா? நன்றாகக் கற்பர். அதிலுள்ள அர்ச்சனை நாமங்களைத் தெரிந்துகொள்ளுமளவிற்காவது அவர் செவ்வையாகக் கற்றுக்கொள்ளமுடியும். ஆனால் இப்போதுள்ள தமிழ்ப் புலவருட் பெரும்பாலரர் அம்மொழியைக் கருதுவதுமில்லை, ஏன்? தமிழ்வெறி, சம்ஸ்கிருதப்பகை, சைவாபிமானமின்மை முதலியவற்றால் அவருள்ளம் பதங்குலைந்தது. அதுவே காரணம். Something of everything and everything of something என்பதே கல்வியுடைமைக்கு அடையாளமென்பர் மேலைநாட்டார். தமிழ்ச் சைவருக்கு everything of something என்பதிலுள்ள something ஆக இருத்தற்குரியது சைவசமய மொன்றே; everything என்பதில் சம்ஸ்கிருதமும் அடங்கி அதிலுள்ள சைவநூல்களைக் கற்பதும் அவசியமாகும்; something of everything என்பதிலுள்ள everything என்பதில் சம்ஸ்கிருதமும் ஒன்றாதற்குரியது; something என்பதால் அம்மொழியையும் சிறிதேனுங் கற்பதவசியமென்க. ஆகவே தமிழ்ச் சைவநூல்களைப் பயில்வதோடு சம்ஸ்கிருதச் சைவநூல்களைப் பயில்வதும் சைவசமயக் கல்வி பெருகுவதற்கு ஏதுவாகு மென்பது பெறப்பட்டது.

ஒருவர் இருவர் ஒருசிறு குழுவினர் சம்ஸ்கிருதத்தில் வல்லரா யிருந்திருக்கலாம், அதைப்பற்றிக் கேட்கவில்லையென்றார் நவீனர். அவ்வொருவராதியோருந் தமிழர்தான். அவர் அம்மொழியை அப்படிக்கற்றதே னென்பதை அந்நவீனர் அறிவாரா? அந்த ஏன் என்பது வாயாற் கேட்குங் கேள்வி. அதை அவர் கேட்டற் கவசியமில்லை. நான் கேட்கவேண்டும்; ஆகலின் கேட்கிறேன். ஆனால் அதைக் காதாற் கேட்குங் கடன் அவர்க்குண்டு. அப்படிக் கேட்க மறுப்பாராயின் அவர்க்கு விடைசொல்லத் தெரியாதென்பதே முடிவு. அவ்விருமொழி வல்லாரால் சம்ஸ்கிருதத்திலுள்ள பலநலன்கள் தமிழிற் கொண்டுவரப் பட்டன. அறிவுக் களஞ்சியமாகிய சைவநூல்கள் பல தோன்றின. அவ்வொருவர் இருவர் ஒருசிறு குழுவினர் போதுபோக்கும் பொருட்டு அம்மொழியைக் கற்றிலர், அம்மொழியில் அழுக்கை கொண்டு என்னதானிருக்கிறதெனக் காணலாமென்ற மாசுபடிந்த மனத்தினராயுங் கற்றிலர். அவர் கற்ற அக்கல்வி சாமானியமானது மன்று. உண்மையால் நோக்கினால் அக்காலத் தமிழ்ச்சைவ விற்பன்னருள் மிகப்பெரும் பகுதியினர் சம்ஸ்கிருதக் கல்வியிலும் வல்லராகவே விளங்கினரென்பது தேற்றம். 'முன்னர் வாழ்ந்த(தமிழ்)மக்கள் தென்மொழியைச் சிறப்பாகக் கற்றுத் தேர்ந்தபின்னர் வடமொழியை விருப்பமொழியாகக் கற்று அதன் சிறப்பையும் தமிழின் சிறப்பையும் அறிந்தனர். அவர்கள் பிறமொழியைக் கற்றுவிட்ட காரணத்தினால் தன் தாய்மொழியாம் தமிழ்மொழியை வெறுக்கவும் இல்லை. இகழவும் இல்லை. ...வடமொழியைப் பயின்ற குயவன் ஒருவன் தாய்மொழியாம் தமிழை தாழ்த்திப் பேசினான்...' (3-12-55 தமிழ்நாடு) என்கிறார் கல்லூரித் துணைவிரிவுரையாளர் கே எம். கே. அப்துல்காதர். அதனால் ஒருவர் இருவர் ஒருசிறு குழுவினர் என்ற குறுங்கணக்குப் பொய்யாதல் காண்க. பண்டைநாளில் தமிழை இகழுமளவுக்கு ஒரு குயவனும் சம்ஸ்கிருதத்தில் பயிற்சிபெற்றிருந்தானென்றால் அம்மொழிப்பயிற்சி இத்தமிழகத்தில் எவ்வளவு மிக்கிருந்திருக்குமென்பதை அறிஞர் தெரிக.

இனி எக்காலத்திலாவது தமிழ்மக்களனைவரும் வடமொழியில் வல்லமை பூண்டவர்களாகிவிடப் போகிறார்களா எனக்கேட்

(12ம் பக்கம் பார்க்க)



உ
சிவமயம்
பாலரூவாயர் துணை

'அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து'

சந்தா:
உள்நாடு ரூ—3
வெளிநாடு ரூ–6

செட்டிநாடு

துன்முகி மார்கழி-13

# நமது ஆட்சிமொழி

குமரியோடு வடவிமயத்து ஒருமொழிவைத்து உலகாண்ட சேர மன்னன், செங்குட்டுவனையும் இளங்கோவடிகளையும் ஈன்று புகழ் கொண்டவனென்று சிலப்பதிகார முதலிய நூல்களால் அறிகின்றோம். பிறநாடுகளும், மொழிகளும் வளம்பெறுதிருந்த பண்டைநாளில், அப் பிறநாடுகளுக்கு நாகரீகமின்னதெனக் கற்றுக்கொடுத்தவர் தமிழரென் பதை, வரலாற்று நூல்களில் வல்ல உண்மையறிஞர்கள் ஒப்புக் கொள்கின்றனர்.

முடியுடை வேந்தர்களாகிய சேர சோழ பாண்டிய மன்னர்களின் ஆட்சி தமிழ் நாட்டில் இருந்தவரை, தமிழன்னை ஈடும் எடுப்பும் இல்லாத சிறப்பிடம் பெற்றுத் தனிச்செங்கோல் செலுத்தி விளங்கினாள். தமிழ்மன்னர்களுக்குப் பிறகு தமிழ்நாட்டையாண்ட மகமதியர்-நாயக்கர்-ஆங்கிலேயர் ஆதியோரால் தமிழ்நாட்டுக்கும் தமிழுக்கும் தமிழருக்கும் பலவகைச் சிறுமைகள் உண்டாயின.

அச்சிறுமைகளுள் ஒன்றுதான்; தமிழ்மொழியின் தனிமையையும் பெருமையையும் அறியாது அதைப் புறக்கணித்ததாகும். ஆட்சியாள

ரனைவரும் தத்தம் மொழிகளையும் பண்பாடுகளையும் புகுத்துவதற்குத் தமிழ்மொழியறிவு தடைசெய்கின்றதென்று கண்டு: பல்லாற்ருனும் செய்துவந்த தீங்குகளே, தமிழ்மொழிச் சொற்கள் பலவற்றை வழக்கிழந்து மறையும்படி செய்துவிட்டன.

இன்று நம்நாடு, நம்மவராலேயே ஆளப்பெற்று வருகின்ற தென்ருலும், நமது பழய பண்பாடுகள் நம்மை மீண்டும் அடைதல்வேண்டுமென்ற எண்ணம் இன்றைய நமது ஆட்சியாளர்களுக்கு அழுத்தமாக இல்லையென்பது தேற்றம்.

முழுதும் தமிழைத் தாய்மொழியாகக்கொண்ட மக்களே வாழ்ந்து வருகின்ற நமது மாநிலத்தில், தமிழை ஆட்சிமொழியாக்கிக்கொள்ளுதற்கு, எத்துணையோ தடவைகள்-எத்துணையோ அறிஞர்கள், எவ்வளவோ பாடுபட்டபிறகு இப்பொழுதுதான் அரசியலார் அதற்கொரு சட்டம்கொண்டுவர முன்வந்திருக்கிருர்கள்.

அந்நியராட்சி நம்மைவிட்டு நீங்கியபிறகும் அவர்கள் விட்டுச் சென்ற டபேதார், கஜானு, ஷரா முதலிய சொற்கள் இதுவரை நம்மை நீங்காமல் ஒட்டிக்கொண்டுதானிருக்கின்றன. 1948ம் ஆண்டு முதல் நடைபெற்றுவருகின்ற திருச்சிராப்பள்ளி மாவட்ட ஆட்சித் தமிழும் எழுத்துத் தமிழேயன்றி, மொழித்தமிழன்று என்பதை வற்புறுத்திக்கூற விரும்புகிருேம்.

தமிழ், ஆட்சிமொழியாகப்போகும் இந்தவேளையில், பிறமொழிச் சொற்களைத் தமிழெழுத்தில் எழுதித் தமிழென்று மகிழாமல் உண்மைத்தமிழறிஞர்களின் உதவிகொண்டு, தமிழாட்சிச் சொற்களை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுவது அரசியலாரின் முதற்பெருங் கடமையாகும்,

(9ம் பக்கத் தொடர்ச்சி)

டார் நவீனர். மாட்டாரென்பது அவர் கருத்து. அவர் ஜோசியங் கூறுவதில் வல்லவர்போலும். எனக்கு ஜோசியப்படிப் பில்லை. தமிழர்கதி எதிர்காலத்தில் எப்படியிருக்குமோ? எனக்குத் தெரியாது. ஆனால் எல்லோர் வாயிலும் என்றைக்காவது வடமொழி நுழையுமா வென்று கேட்டாரே அவர். அதை நினைக்கும்போது தான் சிரிப்பும் வேதனையுஞ் சேர்ந்து வருகின்றன. சம்ஸ்கிருதம் ஆங்கிலத்தைவிடக் கஷ்டமா? ஹிந்தியைவிடக் கஷ்டமா? தமிழர்வாயில் அவ்வாங்கிலமும் ஹிந்தியும் நுழையும்போது சம்ஸ்கிருதமாத்திரம் நுழையாமற் போமோ? தமிழர் சிலதலைமுறைகளாகவே ஆங்கிலத்தில் வல்லுநரா யிருந்திருக்கின்றனர். எத்தனையோ ஆயிரக்கணக்கான தமிழரின் ஆங்கிலப் பேச்சு ஆங்கிலேயரின் பேச்சைவிட அழகாயிருப்பதுமுண்டு. இப்போது ஹிந்தியிலும் அவர் அத்திறமை பெற்றுவருகின்றனர். அங்ஙனமாக அவர் வாயில் சம்ஸ்கிருதம் நுழையுமாவெனச் சங்கிப்பது தவறு. தாராளமாய் நுழையும். ஒருவர் இருவர் ஒருசிறு குழுவினர் என முன் நவீனர் சுட்டிய தமிழர்வாய் போன்றதே நவீனர், ஏனைத் தமிழர் ஆகியோர் வாயும். ஆகலின் அதிலும் சம்ஸ்கிருதம் இலேசில் நுழையுமென்பதையும் நவீன ரறிக. இத்தேசத்தில் ஆங்கிலப்படிப்பு வயிற்றுச் சோற்றில் தொடங்கியது. ஆங்கில அரசு அம்மொழியைப் படிப்பித்துப் படித்தவனைத் தனக்குப் பயன்படுத்திக் கொண்டே அவனுக்குச் சோறும் நீருங் காட்டிவந்தது. அவனுடலும் வளரலாயிற்று. அவ்வனுகூலம் சாமானியருக்கும் புலப்படக்கூடியது ஆகலின் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து அம்மொழியைக் கற்பாராயினர். உடற்குறுதி தாவே அம்மொழியால் முடியும். ஆனால் உயிர்க்குறுதியெனவும் ஒன்றுண்டு. அதைத் தரவல்லது சம்ஸ்கிருதம். உயிர்க்குறுதி பெறுவதே வாழ்க்கையின் குறிக்கோள். அங்ஙனங் கொள்ளத் தக்க சூழ்நிலையை அனைவருக்கும் அரசு உண்டாக்கித் தரட்டும். அப்போது சம்ஸ்கிருதத்தையும் பல்லாயிரவர் ஒருவர்மேலொருவர் விழுந்து கற்க முற்படுவர். இன்றேல் சாமானியரால் அம்மொழியைக் கற்க முடியாதுதான்.

(தொடரும்)

# படித்தோம்!

சிவசிவை திருமணம்:- லெட்சுமிபுரம் சொக்கலிங்க வித்தியா சாலை வெளியீடு-14. மணமகன் A. R. செல்வமுத்துக்குமார் பி. இ., மணமகள் தனலெட்சுமி பி. ஏ. திருமணநாள் 14-11-56 -ல் வெளியிடப்பெற்றது. பன்னிரு திருமுறைகளிலுமிருந்து குகஸ்ரீ ரசபதி அவர்களால் தொகுக்கப்பெற்ற 95 திருப்பாடல்கள் இதில் அடங்கியுள்ளன.

## திருமணம்

13-12-56 காலை 7-30மணிக்கு ராயவரம் திரு. சு. அரு. அருணசலம் செட்டியார்மகன் முருகப்பனுக்கும் (வயி. பெ. வகுப்பு) கானாடுகாத்தான் திரு, பெ. சித. சுப்பிரமணியன் செட்டியார் மகள் செல்லமை என்ற சிகப்பிக்கும் (மாத்தூர் மணலூர் பிரிவு) மணமகள் இல்லத்தில் சிக்கனமான முறையில் திருமணம் நடந்தது.

## பொதுத் தேர்தல்கள்

புதுடில்லி, டிச. 19- இந்தியப் பொதுத்தேர்கள் 1954 பிப்ரவரிமாதம் 25ம் தேதி தொடங்கி மார்ச் மாதம் 12ம் தேதிக்குள் முடிவடைந்து விடுமெனத்தலைமைத் தேர்தல் அதிகாரி திரு, சுகுமார்சென் இன்றிரவு நிகழ்த்திய வானொலிப்பேச்சில் தெரிவித்தார். பொதுத்தேர்தல்கள் இவ்வாறு ஒவ்வொரு மாகாணத்திலும் 16நாட்களிலோ அல்லது அதற்கு முன்போ முடிவடைந்துவிடும் என்றும் நாடெங்கிலும் இக்குறிப்பிட்ட ஒரே காலத்திற்குள்ளேயே தேர்தல்கள் நடைபெறும் என்றும் திரு, சுகுமார்சென் குறிப்பிட்டார்.

## சோடா தூள் உற்பத்தி

இந்தியாவில் சோடா தூள் உற்பத்தி 1946ல் மொத்தம் 12,000 டன்னாக இருந்தது, 1955ல் 77,270 டன்னாக உயர்ந்துவிட்டது.

## சிவதீட்சை

திருவையாற்றில் சிவபூஜா சிரோன்மணி ஸ்ரீசேவு. மெய்யப்ப செட்டியாரவர்கள் செய்துவைத்த ஏற்பாட்டின்படி தங்கள் அரண்மனைப் பெருமாளிகையில் இவ்வாண்டு ஆருத்திரா தெரிசனநாளில் சிவதீட்சைகள் நடைபெற்றன பழநி சிவ ஸ்ரீ ஈசானசிவாசாரிய குருமூர்த்திகள் எழுந்தருளியிருந்து தீட்சைகள் செய்தனர். தீட்சாமண்டபப்புனைவு கண்கொள்ளாக்காட்சியாக இருந்தது. முதல்நாள் காவிரியின் தைப்பூசத்துறையிலிருந்து குருமூர்த்திகளை மேளவாத்தியங்களுடன் சீடர்கள் புடைசூழ அழைத்துவந்த காட்சி விம்மிதமாக இருந்தது. யாகபூசை தொடங்கி மாணவர்களுக்குக் காப்பணிவித்தல் முதலிய விதிமுறைகள் நடைபெற்றன. இரவு மணி 11க்குப் பூரணகுதி தீபாராதனை நடைபெற்றது. சமய தீட்சை பெண்மணிகளுள் படப் பத்துப்பேருக்குச் செய்யப்பட்டது. காஞ்சிபுரம் மெய்கண்டார்கழகச் செயலாளர் திருஞானசம்பந்தமுதலியார் முதலாயினோர் ஐவருக்குச் சிவபூசை எழுந்தருளிக் கொடுக்கப்பட்டது அரசர் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் வித்துவான் கோவிந்தசாமிப் பிள்ளையவர்கள் நிர்வாணதீக்கை பெற்றுக்கொண்டனர். மெ. அவர்களுக்கு வருடப் பிராயச்சித்தாபிடேகம் செய்யப்பெற்றது. பின் எல்லோருடைய பூசைமூர்த்திகளுக்கும் சிவாச்சாரியசுவாமிகளே தேவார பாராயணத்துடன் நடத்திய மகாபிடேகக்காட்சி எழுதத்தக்கதன்று. 300க்கு மேல் தனவைசியப் பெருமக்களும் உத்தியோகத்தினர்களும், மற்றும் பொதுமக்களும் வந்திருந்து கலந்துகொண்டனர். மாலையில் பதினாயிரத்தெட்டு(10008) மகார்ச்சனை 5மணிநேரம் நடைபெற்றது. தீட்சைவிழா ஆச்சாரியர் வழிபாட்டுடன் பூர்த்தியடைந்தது.

## தமிழை ஆட்சிமொழியாக்கும் மசோதா

தமிழை அரசாங்க மொழியாக்க வகை செய்யும் மசோதா ஒன்றை இன்று சென்னை அரசாங்கம் வெளியிட்டுள்ளது.

## அரவிந்தர் தினம்

இம்மாதம் 5உ மாலையில் நாகர்கோயில் ஸ்ரீசித்திரா இந்து மத நூல்நிலையத்தில் அரவிந்தரின் 6வது சமாதி தினம் நன்னெறி மன்றத்தலைவர் ஸ்ரீ சி. வள்ளிநாயகம் பிள்ளையின் தலைமையில் நடைபெற்றது. சைவப்புலவர் பகவதிப்பெருமாள்பிள்ளை, ஸ்ரீ என். சங்கரய்யர், ஸ்ரீ ஹரிஹர அய்யர், "தொண்டன்" ஆசிரியர் ஸ்ரீ ஆறுமுகநாவலர் ஆகியோர் அரவிந்தர் தத்துவங்களை விளக்கிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். தலைவர் கருத்துரைக்குப்பின் ஸ்ரீ அகிலாண்டமய்யர் நன்றிகூற விழா இனிது முடிந்தது.

## மயிலம் இளவரசு மறைவு

பொம்மபுர ஆதீனம் மயிலம் ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் மடத்தின் இளவரசு வித்துவான், கு. சிவசுப்பிரமணியம் அவர்கள் 9-12-56 காலை சிவலிங்க ஐக்கியம் ஆனார்கள். மயிலம் சுப்பிரமணியசுவாமி உயர்நிலைத் தொடக்கப்பள்ளி, சிவப்பிரகாசர் உயர்நிலைப்பள்ளி, சி. பா. சு. தமிழ்க்கல்லூரி ஆகியவற்றின் புரவலராகவும், திண்டிவனம் காங்கிரஸ்கமிட்டி உறுப்பினராகவும் இருந்து சிறந்த பணியாற்றி வந்த இவர்களது பிரிவு, ஈடுசெய்து கொள்ளமுடியாத நஷ்டத்தைத் தந்துவிட்டது.

## இராசரத்தினம் காலமானார்

சென்னை டிச. 12- இந்தியாவின்தலைசிறந்த நாதசுரவித்துவான் திருவாவடுதுறை திரு, என். இராசரத்தினம் காலமானார். திரு, இராசரத்தினம், சிறிது காலமாக நோய்வாய்ப்பட்டிருந்தார். இன்று காலை சென்னையில் அவர் காலமானார். அவருக்கு வயது–56. 2ஆண்டுகளுக்கு முன்பு குடியரசுத் தலைவரின் பதக்கம் அளிக்கப்பட்டு திரு, இராசரத்தினம் கௌரவிக்கப்பட்டார்.

# பதினாறு பேறுகள்

## சிவபெருமானிடத்து நந்தியம்பெருமான் வேண்டிப்பெற்றவை.

மறைகள் சிந்தனை சைவ சிந்தனை பொருமனமும்
தறுகண் ஐம்புலன் களுக்கேவல் செய்யுருச் சதுரும்
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறம் செய்பவர் தங்களோ டுறவும்

வேத சிந்தனை-சிவாகம சிந்தனைகளைப் பொறுக்காத மனமும், அஞ்சாமையையுடைய மெய், வாய், கண், மூக்கு, செவிஎன்னும் ஐந்துபுலன்களுக்கும் அடிமைசெய்யாத சதுரப்பாடும், பிறவியைத் தீதென்று கருதாத பேதையர்களோடு பிணக்கமும், உறுதியாகிய சிவபுண்ணியசீலர்களோடு நட்பும்.

யாதுநல் அன்பர் கேட்பினும் உதவுறும் இயல்பும்
மாத வத்தினோர் ஒறுப்பினும் வணங்கிடும் மகிழ்வும்
ஓதும் நல்லுப தேசமெய் உறுதியும் அன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செயல் எனக்கொளும் தெளிவும்

மெய்யன்பர்கள் எதைக்கேட்பினும் கொடுக்கின்ற இயல்பும், பெரிய தவத்தை உடையவர்கள் தண்டித்தாலும் அதனால் விளைகின்ற நற்பயனை யெண்ணி வணங்குகின்ற மகிழ்ச்சியும், ஞானகுரவர் அருளுகின்ற உபதேச உண்மையில் உறுதிப்பாடும், ஆண்டவனது அன்பர்கள் தீயது போலத் தோன்றுகின்ற செயல்களைச் செய்தாலும், அவற்றைச் சிவச்செயலென்று கருதிக் கொள்ளுகின்ற தெளிவும்

மனமும் வாக்கும்நின் அன்பர்பால் ஒருப்படு செயலும்
கனவி லும்நின தன்பருக் கடிமையாம் கருத்தும்
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்
புனித நின்புகழ் நாடொறும் உரைத்திடும் பொலிவும்

மனமும் மொழியும் நின து அன்பர்களிடத்து ஒருமைப்படுகின்ற செயலும், கனவிலும்கூட நினது அன்பர்களுக்கு அடிமையாயிருக்கின்ற கருத்தும், நினைவிலே நின்னையன்றி மற்றைக் கடவுளரை வழிபடாத நிலைமையும், தூய்மையான நினது புகழை நாடோறும் உரைக்கின்ற விளக்கமும்

தீமை யாம்புறச் சமயங்கள் ஒழித்திடு திறனும்
வாய்மை யாகவே பிறர்பொருள் விழைவுறு வளனும்
ஏழு றும்பர தாரம்நச் சிடாதநன் னோன்பும்
தூய்மை நெஞ்சில்யான் எனதெனும் செருக்குறுத் துறவும்

தீயொழுக்கங்களையுடைய புறச் சமயங்களை ஒழிக்கின்ற திறமையும். உண்மையாக மற்றையோர் பொருள்களை விரும்பாத வளமையும், பிறர் தாரம் நாடாத உயர்ந்த நல்ல விரதமும், தூயதாகிய நல்ல நெஞ்சில் யான்—எனது என்னும் செருக்கையடையாத துறவும்

துறக்கமீ துறையினும் நரகிற் றோயினும்
இறக்கினும் பிறக்கினும் இன்பம் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும இவ்வரம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்

சுவர்க்கத்தில் இன்புற்றாலும், நரகத்தில் துன்புற்றாலும், செத்தாலும், பிறந்தாலும், வாழ்ந்தாலும் பிறைத்திங்களையணிந்த சடையையுடைய பெருமானே! இவ்வரங்களை மறுக்காமல் எனக்கு நீ வழங்குதல் வேண்டும்.

மதுரைச் சொக்கேசரிடத்து வண்டமிழ்ப் புலவர் ஒருவர் வேண்டிய பதினாறு பேறுகள்:-

துதிவாணி வீரம் விசயம்சந் தானம் துணிவுதனம்
அதிதானி யம்சவு பாக்கியம் போகம் அறிவழகு
புதிதாம் பெருமை அறம்குலம் நோயின்மை பூண்வயது
பதினாறு பேறும் தருவாய் மதுரைப் பராபரனே

மதுரையில் எழுந்தருளியுள்ள பரம்பொருளாகிய சொக்கலிங்கப் பெருமானே! புகழ், கல்வி, வீரம் வெற்றி, புத்திரப்பேறு, தைரியம், செல்வம், தானியம், உயர்வு, போகம், அறிவு, அழகு, பெருமை, அறம், மேன்மை வாழ்நாள் ஆகிய பதினாறு பேறுகளையும் தருவாயாக.

# 'மறுமணத்தின் எதிரொலி'

சித-சேதுராமன்

(முன்தொடர்ச்சி)

என் அருமைமகனை ஓர்முறையாவது பார்த்துவிட்டு உயிர் துறப்பது என்பதே அது. சுகத்தைக்கண்ட எனக்கு இப்பொழுதுதான் உலகத்தின் உண்மை புரிகிறது. எத்தனை குடும்பங்கள் என் கொடுமையால் கெட்டுப் போயின அப்பப்பா! நினைக்கவே நெஞ்சம் நடுங்குகிறது. அதன் விளைவுதான் இன்று பிச்சைக்காரனிலும் கேடுகெட்டவனாக அலைகிறேன். பணத்தினால் செருக்குண்ட நான் இப்பொழுது சோற்றுக்குச்சொறிநாயுடன்போராடுகிறன். ஏழைகளின் அல்லலை இப்போதுதான் உணர முடிகிறது.

சேகரன்: 'இன்று அந்நியர் ஆட்சியினின்றும் நம்நாடு விடுதலை பெற்ற நன்னாள். உங்கள் எல்லோருக்கும் விடுதலை' என்று வார்டன் கூறிச்சென்றான். விடுதலை என்றவுடன் நான் மகிழ்ச்சி அடைந்தேன். ஆனால் அதேசமயம் வருத்தமும் அடைந்தேன். என்? வேலையில்லாத் திண்டாட்டத்தின் நினைப்பு! விடுதலை அடைந்த நான் எங்கு செல்வேன்? ஆதரிப்பவர் யார்? மீண்டும் அலைந்தேன் சென்னையைச் சுற்றி. சமுதாயம் 'திருடன் திருடன்' என்று ஏசியது. ஆம் சட்டத்தின்படி திருடன்நான்—சமுதாயம் புறக்கணிக்கும் மனிதன்-வாழ முடியாதவன்தானே! பணம்கொடுத்தும் உணவு விடுதியில் உணவில்லை. சத்திரத்தில் தங்க இடமில்லை. எந்தச் சமுதாயத்தை வளப்படுத்த முயன்றேனோ—எந்தச்சமுதாயத்திற்குப் பாடுபட எண்ணினேனோ அந்தச் சமுதாயம் இப்பொழுது என் மனக்கோட்டைகளைத் தகர்த்துப் புறக்கணிக்கிறது. என் ஒரே ஆசையை நிறைவேற்ற முடியாமலிருந்த என்னை, கொந்தளிக்கும்கடல்-ஏழையின் துன்பத்திற்கு இன்பமளிக்கும்கடல்-வாழ்க்கையில் வெறுப்புள்ளவர்களுக்கு விருப்பமளிக்கும் கடல்-கற்பிழந்த பெண்களைக் கண்ணியப்படுத்தும் கடல் 'கோ' என்றலறி 'வா' வென்றழைத்தது. அசைந்துவரும் தென்றலோ 'நாட்டுக்குச் சேவைசெய்யும் நீ! நம்பிக்கையை இழப்பதா? சமுதாயக் குப்பைகளைக் களைந்தெடுக்கும் நீ! சாகத்துணிவதா? வேண்டாம்' என்று பேசியது. மோதிவரும் அலைகளோ, 'அன்பனே! எப்படி வாழமுடியும் நீ-

திருடன் என்று அழைக்கப்படும்நீ-தன்வயிற்றுக்கு உணவில்லாமல் அலையும் ஏழையாகியநீ-செல்வ உலகிலே-பண்பாடற்ற பணக்காரரிடையே எப்படி வாழ்வாய்' என்று கேலிசெய்தது. ஆம். வேதனையால் வெந்துகிடந்த என் உள்ளத்திற்கு முடிவு தேடிவிட்டேன். இறுதியிலே தாய்நாட்டுக்கும், தந்தைக்கும் வணக்கம் செலுத்திவிட்டுப் பாய்ந்தேன் கடலில்-தடுத்துநிறுத்தியது ஒரு பெண்ணுருவம். தற்கொலைசெய்து கொள்வது அறியாமையல்லவா? கோழைகள்தானே இக்காரியத்தைச்செய்வர்' என்று ஆறுதல் கூறி அழைத்துச்சென்றது.

**சாந்தா:** மில் முதலாளி முருகேசம்பிள்ளையின் அருமைப் புதல்வியாகத் திகழ்ந்தேன். அன்னையைப்பிரிந்தும் தந்தையின் பாசத்தால் ஏழைகளின் உலகம் தெரியாமல் வாழ்ந்தேன். செல்வம் என்னைத் தாலாட்டிச் சீராட்டிச் சுகமாக வளர்த்தது. ஒரு நாள் உல்லாசமாக-கடற்கரையின் பயனைத் துய்க்கக்கடற்கரைக்குச்சென்றேன். அப்பப்பா! இந்தச் சமுதாயம் இருக்கிறதே-நல்லவர்களுக்கும், தீயவர்களுக்கும வேற்றுமை தெரியாமல். அன்று மட்டும் நான் அவரைத்(சேகரனை) தடுத்திராவிட்டால் தமிழ்த்தாய் அரும்பெரும் புதல்வனை இழந்திருப்பாள். நானும் அவரை அடைந்திருக்கமுடியாது.

**சேகரன்:** சாந்தாவின் எழில் என்மனதைஈர்த்தது. அவள் அருகில் இருப்பதிலே தனிஇன்பம் இருக்கக்கண்டேன். என் சிந்தைக்குச் சாந்தியை அளித்த சாந்தாவின் தந்தையோ மிகவும் நல்லவர். செல்வந்தர்களில் விலக்கு-ஏழைகளின் நண்பர்-அன்பின் பிறப்பிடம். காதல் தன்மையை நன்கு அறிந்த அவர் எங்கள் இருவரையும் மணமக்களாக்கி மில்பொறுப்பையும் என்னிடம் தந்தார். காலச்சக்காம் சுழன்றது.

ஒருநாள் காலை, அன்றுவந்த கடிதங்களைப் படித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது யாரோ ஒருகிழவர் கிழிந்த ஆடையை அணிந்தவண்ணம்வேலைநிமித்தமாகவந்திருப்பதாகக்கூறிச்சென்றான் ஆபீஸ்பையன். சென்று பார்த்தேன். என்கண்களை நான் நம்ப முடியவில்லை. அவர் வேறுயாருமில்லை என் தந்தையேதான். மகிழ்ச்சிப்பெருக்கால்அவரை இறுகத்தழுவினேன். பிரிந்த நாங்கள் ஒன்றுகூடிய அன்று என் தாயின் உருவப்படத்திற்கும் சிற்றன்னையின் நிழற்படத்திற்கும் மாலையிட்டு வணங்கினோம். ★

# நாணய மாற்றுப் பட்டியல்

1957 ஏப்ரல் 1உமுதல் தற்போதைய நாணயங்களும், புதிய நாணயங்களும் வாங்கவோ கொடுக்கவோ செல்லுபடியாகும். இரண்டு நாணயங்களில் எதைக்கொடுத்தாலும் யாரும் மறுக்கக் கூடாது. நாணய மாற்றுப் பட்டியலில் ஒரு குறிப்பிட்ட நாணயத்திற்குச் சமமான மற்ற நாணயம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு மேலாகக் கேட்கவோ கொடுக்கவோ கூடாது. உங்களிடம் இருக்கும் நாணயங்களுக்கு ஏற்றவாறு தற்போதைய அல்லது புதிய நாணயத்தையோ அல்லது இரண்டையும் சேர்த்தோ கொடுக்கலாம்.

எந்தவொரு லேவாதேவியிலும் நாணயங்களை ரொக்கமாகக் கொடுத்து மாற்றவேண்டியபோது அதற்குச் சமமான மற்ற நாணயங்கள்:—

| அணா | பை | நயா பைசா | அணா | பை | நயா பைசா | அணா | பை | நயா பைசா | அணா | பை | நயா பைசா |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 3 | 2 | 4 | 3 | 27 | 8 | 3 | 52 | 12 | 3 | 77 |
| 0 | 6 | 3 | 4 | 6 | 28 | 8 | 6 | 53 | 12 | 6 | 78 |
| 0 | 9 | 5 | 4 | 9 | 30 | 8 | 9 | 55 | 12 | 9 | 80 |
| 1 | 0 | 6 | 5 | 0 | 31 | 9 | 0 | 56 | 13 | 0 | 81 |
| 1 | 3 | 8 | 5 | 3 | 33 | 9 | 3 | 58 | 13 | 3 | 83 |
| 1 | 6 | 9 | 5 | 6 | 34 | 9 | 6 | 59 | 13 | 6 | 84 |
| 1 | 9 | 11 | 5 | 9 | 36 | 9 | 9 | 61 | 13 | 9 | 86 |
| 2 | 0 | 12 | 6 | 0 | 37 | 10 | 0 | 62 | 14 | 0 | 87 |
| 2 | 3 | 14 | 6 | 3 | 39 | 10 | 3 | 64 | 14 | 3 | 89 |
| 2 | 6 | 16 | 6 | 6 | 41 | 10 | 6 | 66 | 14 | 6 | 91 |
| 2 | 9 | 17 | 6 | 9 | 42 | 10 | 9 | 67 | 14 | 9 | 92 |
| 3 | 0 | 19 | 7 | 0 | 44 | 11 | 0 | 69 | 15 | 0 | 94 |
| 3 | 3 | 20 | 7 | 3 | 45 | 11 | 3 | 70 | 15 | 3 | 95 |
| 3 | 6 | 22 | 7 | 6 | 47 | 11 | 6 | 72 | 15 | 6 | 97 |
| 3 | 9 | 23 | 7 | 9 | 49 | 11 | 9 | 73 | 15 | 9 | 98 |
| 4 | 0 | 25 | 8 | 0 | 50 | 12 | 0 | 75 | 16 | 0 | 100 |

உ

# செட்டிநாடு

திங்கள் இருமுறை

சமய வளர்ச்சி, மொழியாக்கம் கருதி உழைப்பது.

மலர்-26] துன்முகி-மார்கழி-27 10-1-57 [இதழ்-6

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன் செட்டியார்

## பொங்கல் வாழ்த்து

தென்னாட்டுச் செல்வமெனத் திகழு கின்ற
செந்நெலையுங் கரும்பினையுஞ் சிவமா மன்னும்
பொன்னாட்டு மஞ்சளையுஞ் சுவையான் மிக்க
பொருள்களையுங் கொடுபசும்பாற் பொங்க லிட்டுக்
கன்னாட்டி வழிபடுமெங் கடவு ளுக்குக்
களிப்புடனே படைத்துறவோர் நண்பர் கூடிச்
சொன்னாட்டி மகிழ்சிறப்ப வுண்ணு தற்குத்
தோன்றுதிரு நாள்வந்த துலகம் வாழ்க!

நலம்பெருகுக. -:பாலகவி

ஒவ்வொரு இரண்டாவது நான்காவது
வியாழக்கிழமைகளில் வெளிவரும்.




# குறிஞ்சி

தோழி, தலைவனது வரவுணர்ந்து தலைவிக் குரைப்பாளாய்த், தலைவியினது வேறுபாடு தாய்க்குப் புலனாக அவள் வேலனைக் கூவி வெறியயர்வாளென்பது தோன்றச் சொல்லி, இனி வரைந்தன்றிக் களவினியலா தென்பதைத் தலைவனுக்குக், குறிப்பா லுணர்த்தியது.

இஃதேவன் கோல்லோ தோழி மேய்பரந்
தேவ்வங் கூர்ந்த வேமுறு துயரம்
வேம்மையிற் றான்வருத் துறீஇ நம்வயி
னறியா தயர்ந்த வன்னைக்கு வேறியேன
வேல னுரைக்கு மேன்ப வாகலின்
வண்ண மிகுத்த வண்ணல் யானை
நீர்கோ ணேடுஞ்சுனை யமைந்துவார்ந் துறைந்தேன்
கண்போ னீலந் தண்கமழ் சிறக்குங்
குன்ற நாடனை யுள்ளுதோறு
நேஞ்சுநடுக் குறூஉமவன் பண்புதரு படரே. 273

:-மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார்

தோழீ! நினது உடம்பிற் பரந்து, துன்பம் மிக மயங்கிய துயரத்தைக் கண்டு, நம்பால் வைத்த விருப்பத்தினால் தானும் வருத்தங்கொண்டு, நம்மிடத்து நிகழ்ந்ததை அறியாது, வெறியெடுத்த நமது அன்னைக்கு, இது வெறியணங்கென்று வேலன் சொல்லுவானென்பர் ஆகலின் நிற மிகுந்த பெரிய யானை நீர் குடிக்கின்ற நெடிய சுனையிலே அமைந்து நீண்டு, எனது கண்ணையொத்த நீலமலர், குளிர்ந்து மணம் கமழுகின்ற மலைநாடனை நினைக்குந்தோறும், அவன் இயல்பாகத் தந்த கவலை, எனது நெஞ்சை நடுங்கச் செய்கின்றது.




பாசத் தனையறுத் தாண்டுகொண் டோன்றில்லை யம்பலஞ்சூழ்
தேசத் தனசெம்ம னீதந் தனசென் றியான்கொடுத்தேன்
பேசிற் பெருகுஞ் சுருங்கு மருங்குல் பெயர்ந்தரைத்துப்
பூசிற் றிலளன்றிச் செய்யா தனவில்லை பூந்தழையே.

:-திருக்கோவையார் 115.

உரை:- "பாசத்தனை அறுத்து- பாசமாகிய கட்டை அறுத்து விட்டு, ஆண்டுகொண்டோன் - என்னைத் தனக்கு ஆட்படுத்திக் கொண்டவனது, தில்லை அம்பலம் சூழ் தேசத்தன-தில்லையம் பலத்தைச் சூழ்ந்துள்ள தேசத்தின் கண்ணே உள்ளனவாகிய, செம்மல் நீ தந்தன-செம்மலாகிய நின்னால் தரப்பட்ட தழையை, சென்று யான் கொடுத்தேன்-தலைவியிடம் நான் போய்க்கொடுத் தேன், பேசில் பெருகும்-கொடுத்தவுடன் ஆண்டு நிகழ்ந்தவற் றைச் சொல்லுவதானல் அது மிக நீண்டுவிடும், சுருங்கும் மருங்குல்-சுருங்கிய இடையை உடையவளாகியதலைவி; பூந் தழை-அந்தப் பூந்தழையை, அரைத்துப் பூசிற்றிலள் அன்றி- அரைத்துத் தன்உடம்பு முழுதும் பூசிக்கொண்டாளல்லள் என் பதன்றி, பெயர்ந்து-வேறு, செய்யாதன இல்லை-செய்யாதனஏதும் இல்லை'' என்பதாகும்.

திருவாசகம் பாடித் திருச்சிற்றம்பலவரைக் கவர்ந்துகொண்ட திருவாதவூரார், திருக்கோவையார் பாடிச்சிவமாம் பேற்றைப் பெற்றார். மணிவாசகரை நிலவுலகத்திற்கு அனுப்பிய மன்ற வாணர், அவரது திருக்கோவையார் வெளியீடு நிகழ்ந்தபிறகு,

அவரை அனுப்பியதாற் கிடைக்கவேண்டியபயன் கிடைத்துவிட்டதாகக் கருதியதனாலேயே அவருக்குச் சாயுச்சியப் பேற்றை வழங்கி ஆட்கொண்டாராதல் வேண்டும். திருவாதவூரரோடு ஒன்றாயிருந்து திருவாசகத்தை வெளிப்படுத்திய தில்லைச்சிற்றம்பலவன், அவரோடு ஒன்றாயும் உடனாயும் இருந்து திருக்கோவையாரை வெளிப்படுத்தினான். மணிவாசகரென்னும் மலரிலிருந்து வெளிப்பட்ட திருவாசகமும் திருக்கோவையாருமாகிய தேனைத் தில்லைச்சிற்றம்பலவரென்னும் வண்டு சிந்தாது சேகரித்து நம்மனோர் உண்டுய்ய வழங்கியதென்பது யாவருமறிந்த உண்மை.

திருக்கோவையாரை வெறும் இலக்கிய அறிவுமட்டும் படைத்தவர்கள் கற்றால் அதுஒரு காமநூல் என்ற அளவில் சுவைகண்டு இன்புறுவதோடு அமைந்து விடுவார்கள். மற்றைத் திருமுறைகளையும் சைவசித்தாந்த சாத்திரங்களையும் முறையாகக்கற்றுப் பதி பசு பாச உண்மை இலக்கணங்களையும், சாதன சாத்திய இயல்புகளையும் உணர்ந்தவர்கள் திருக்கோவையாரை ஒரு அரிய ஞான நூலென்றே பாராட்டுவார்கள்.

"தமிழ்ச்சங்கமென்று சொல்லப்பெறுகின்ற தடம் பொய்கையிலே தோன்றி உயர்ந்தோங்குகின்ற மெய்ஞ்ஞான ஒளியை உடையதாகி மணம் கமழுகின்ற கிளவிகளாகிய நானூறு இதழ்களைக்கொண்டு, தேனாகிய பொருளை அறிஞர்களாகிய வண்டுகள் கூடி உண்ண திருச்சிற்றம்பலவரின் கருணையாகிய கதிரொளியால் அலருவது திருவாதவூராளியின் திருவளர் தாமரை' என்று ஒரு ஆசிரியர், திருக்கோவையாரைச் சிறப்பித்துப் பாடுகின்றார்.

மணிவாசகப் பெருந்தகையாரது திருவாக்காக வெளிவந்த எல்லாத் திருப்பாடல்களுமே, திருவாசகமென்னும் ஒரு பெயரால் குறிக்கப்பெற வேண்டியவை. ஆகவே, திருக்கோவையாரும் திருவாசகத்துள் அடங்கித் திருச்சதகம் நீத்தல் விண்ணப்பம், மற்றைப் பதிகங்கள் போன்று தனிப்பிரபந்தமாய் அமைந்திருக்கிறதென்பது நினைவிலிருத்தத் தக்கதாகும். ஆனால் திருவாசகம் வேறு, திருக்கோவையார் வேறு என்று கொண்டவர்களும்

இடைக்காலத்தில் இருந்தார்களாதலினாலேயே, திருக்கோவையாரை இயற்றித்தந்த ஆசிரியரும் மணிவாசகரல்லாதவேறொருவரென்ற பிழைபட்ட முடிவு நம்நாட்டில் ஒருசிலருக்கு உண்டாவதாயிற்று.

திருக்கோவையாரின் சொற்பொருளமைதிகள், மணிவாசகப் பெருந்தகையாரது மற்றைத் திருப்பாடல்களின் சொற்பொருளமைதிகளோடு பெரும்பாலும் ஒத்தேயுள்ளனவென்பதை, ஆழப்படித்து அறிந்தவர்கள் நன்கு உணருவார்கள். ஆகவே, திருக்கோவையார் திருமுறைகளில் இடம்பெறுதது என்று சொல்லுவதும், அதன் ஆசிரியர் மணிவாசகரல்லர் என்று உரைப்பதும், தேராதார் கொண்ட தெளிவே என்பது, உறுதிப்படும்.

புறச்சமயப் பிணக்கு நூல்களின் வழியனைத்தும் பிழையென் றறிந்து, சைவசித்தாந்த நெறி தேயிச் சரியை, கிரியை, யோகங்களில் தலைப்பட்டுச் சற்குரு மூர்த்தியின் கருணைக்கு இலக்காய் நிற்பவர்க்கன்றி மற்றையோருக்குத், திருக்கோவையாரின் பேரின்பப் பொருளமைதி புலப்படமாட்டாது. அதனாலேயே திருக்கோவையாருக்கு உலகநூல் வழியில் உரைகண்ட பேராசிரியர் 'திருவாதவூர்மகிழ் செழுமறை முனிவர், ஐம்பொறி கையிகந் தறிவா யறியார், செம்புலச் செல்வ ராயின ராதலின், அறிவனூற் பொருளு முலகநூல் வழக்குமென, விருபொருளு நுதலியெடுத்துக் கொண்டனர், ஆங்கவ் விரண்டனுள், ஆகம நூல் வழியி னுதலிய ஞான, யோகநுண் பொருளினை யுணர்த்துதற் கரிது' என்று உரைப்பாயிரத்தே உரைப்பாராயினர்.

பேரின்பப் பொருளை அகத்தேகொண்டு புறத்திற் சிற்றின்பப் பொருளை விளக்கிச் செல்லுகின்ற திருக்கோவையாரின் களவிக் கொத்து இருபத்தைந்தனுள் பன்னிரண்டாவதாக இருப்பது சேட்படை என்பதாகும். இது இருபத்தாறு துறைகளை யுடையது.

'சேட்படை என்பது, தலைவியைக் குறைநயப்பித்துத் தன்னிலைய கூட்டங் கூட்டலுறுந் தோழி, தலைவியினது பெருமையும்

தனது முயற்சியினருமையும் தோன்றுதல் காரணமாகவும் இத்துணை அருமையுடையாள் இனி நமக்கு எய்துதற்கு அருமையுடையாள் என இதுவே புணர்ச்சியாக நீட்டியாது விரைய வரைந்து கோடல் காரணமாகவும் தலைவனுக்கியைய மறுத்துக் கூறுவதாகும்' என்று பேராசிரியர் கூறுவார்.

'சேட்படை யிருபத் தாறு துறையுங், கிடையா வின்பங் கிடைத்தலா லுயிரை, யருமை காட்டி யறியாள் போலப், பலபல வருமை பற்றி யுரைத்த, வருளே சிவத்தோ டாக்க வருளல்' என்று பேரின்பக் கருத்தில் இக்கிளவி திருச்சிற்றம்பலக் கோவையாருண்மையில் விளக்கப்பெறுகின்றது.

தலைவியைக் களவிற் கூடிப் புணர்ந்த தலைவன், பின்னர்ப் பாங்கனது உதவியாலோ அல்லது முன்னர்த் தந்த தெய்வம் பின்னரும் தானே தருமென்று பொழிலிடைச் சென்று சேர்ந்தோ மீண்டும் தலைவியிடம் அளவளாவியிருக்கக் கருதுவான். இவ்விரண்டனுள் ஒன்றுற் பொழிலையடைந்து தலைவியின் கண்ணுற் காட்டப்பெற்ற காதற்றோழியை இரந்து காந்த மொழியால் தன் கருத்தறிவித்துக் குறையைக் கூறுவான்.

தலைவனது குறையை அவன் வாயிலாக அறிந்த தோழி, தலைவியைப் பல்லாற்றானும் சோதித்துப்பார்த்து அவ்விருவாது நினைவும் ஒருவழியில் நிற்பதை உணர்ந்து தலைவியிடம் தலைவனது குறையைக் கூற முற்படுவாள். தோழியால் தலைவனது குறையறிந்த தலைவி அதற்கு ஆற்றுதவளாய்த் தலைவனைக் காணத் தன் மனத்தொடு பேசுவாள். இதன் பின்னர் நிகழுவதுதான் சேட்படை.

சற்குருவைச் சத்திநிபாதப் பக்குவத்தில் அடைந்து உபதேசம் பெற்ற சீடன் பின்னர் ஆன்மபோத தெரிசனத்தாலோ அன்பாலோ ஆனந்தம்பெறக் கருதுவான். அவ்வாறு கருதியவன் குருவால் அறிவிக்கப்பெற்ற திருவருளைச் சிவத்தோடு கலந்து தெரிசிப்பான்.

அத்திருவருள் சீடனது விருப்பத்தை அறிந்து சிவத்தின் கருணையையும் தெரிந்து இருவர் நினைவும் ஒருவழியில் நிற்பதை உணர்ந்து சிவத்தோடு சீடனை ஒன்றுபடுத்துதற்கு முற்படும். திருவருளால் சீடனது முதிர்ந்து முறுகிய பக்குவநிலையை அறிந்த சிவம், உயிருக்கு இன்பம் சேர இரக்கம் கொள்ளும். இந்த நிலையில் திருவருளின் வழியாகக் கையுறை கொடுத்துச் சிவத்தைச் சேரச் சீடன் முற்படுவான், இந்த இடத்தில்தான் சேட்படை தொடங்குகின்றது.

சேட்படைக்கிளவி இருபத்தாறும், கையுறைப் பொருளாகிய தழையைப் பொருளாகப் பற்றி அமைந்திருக்கும். தழைகொண்டு சேரல் என்னுந் துறையில் தொடங்குகின்ற இக்கிளவி, தழை விருப்புரைத்தல் என்னுந் துறையில் நிறைவு பெறுகின்றது. சிவப்பேறு பெறுதற்கு உயிர் மலர் கொண்டு செல்லுதல் முதலாக உயிரின் பணி சிவத்துக்கு உவப்பென அருள் அறிவித்தல் வரை இத்துறைகளுக்குப் பேரின்பப்பொருள் கூறுவர்.

இக் கிளவியின் இறுதித் துறையாகிய தழை விருப்புரைத்தல் பொருளை யுடையதுதான் மேற்கண்ட பாடல். உயிர்களை அநாதியே பற்றி நிற்கின்ற பாசம் ஆண்டவனது திருவருளாலேயே அறுக்கப்பெறுதல் வேண்டுமெனவும், அது அறுபடாதவரை அவனுக்கு அடிமையாமாறு இல்லையெனவும், பாச நீக்கம் பெற்றுச் சிவப்பேறு அடையும் வரை ஆண்டவனுக்கு அடிமையென்று சொல்லுவது முற்றும் பொருந்திய நிலையி னுள்ளதன்று எனவும் பாடலின் முதல் வரியில் ஆசிரியர் அறிவுறுத்துகிறுர்.

மெய்யன்புடையவர்களது கையுறை மதிப்பாற் சிறியதாயினும் இறைவனுக்கு அதுவே பெருமகிழ்ச்சியைத் தருமென்பதைத் தழைபெற்ற தலைவி அதனைப் பாராட்டியது பற்றிச் சொல்லப், பெரிதும் விரியுமென்று தோழி கூறுவதில் வைத்துக் காட்டிய ஆசிரியரது சதுரப்பாடு அறிந்து மகிழ்தற்குரிய தாகும்.

'அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறமதாகும், பரனடிக் கன்பில்லாதார் புண்ணியம் பாவமாகும்' என்ற சிவஞானசித்தித் திருவிருத்தப்பொருளை இப்பாட்டின் பொருளோடு ஒப்பிட்டுப் பார்ப்பது ஏற்றதாகுமல்லவா?

## கரிகால் சோழனுக்கு நினைவுச்சின்னம்

திருச்சி டிச 28- காவிரிக்கு முதல் அணைகட்டிய கரிகாற் சோழனுக்கு, இலட்சரூபாய் செலவில் கல்லணையில் நினைவுச் சின்னமொன்று கட்டபப்பட்டுவருகிறது.

சோழர் தம் குலக்கொடியாகியகாவிரிக்குக் கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த கரிகாற் சோழன் 12ஆயிரம் ஈழநாட்டுக் கைதிகளைக்கொண்டு, முதல் முதல் காவிரிக்குக் கரையமைத்து அணையொன்றும் கட்டினன். இதனல் கரிகாலனை வளவன், திருமாவளவன், காவிரி புரக்கும் நாடு கிழவோன், காவிரி புரக்கும் நன்ணட்டுப் பொருநன் காவிரிக் கிழவன் என்றெல்லாம் புலவர்கள் போற்றிப்புகழ்ந்தார்கள்.

கரிகாற்சோழன் காவிரியில் கட்டிய கல்லணை திருச்சியிலிருந்து 10மைல் தூரத்தில் இருக்கிறது காவிரியில் கட்டப்பட்ட முதலணை இதுதான். கட்டி இவ்வளவு காலமாகியும், அணை அப்படியே இருக்கிறது. சில சீர்திருத்தங்கள் மட்டும் அவ்வப்போது செய்யப்பட்டன. கல்லணை இந்தியாவிலேயே மிகப் பழைய அணையாகும்; கலை நுணுக்கமும பொறியியல் நுட்பமும் நிறைந்ததாகும் ஆகவே கல்லணையைப் பொறியியல் வல்லுநர்கள் வந்து காணவேண்டுமென்று அரசாங்கம் விழைகிறது. கரிகாற் சோழனின் பழைய சிலையொன்று கல்லணையில் இருக்கிறது. அச்சிலைஇப்பொழுது புதுப்பித்து அழகுபடுத்தப்பட்டுவருகிறது. புதிய பூங்கா ஒன்றும் அமைக்கப்பட்டு வருகிறது- உள்நாட்டு வெளிநாட்டு இன்பச் செலவினர் வந்து செல்லும் இடமாகக் கல்லணை மாற்றியமைக்கப்பட்டு வருகிறது. இதற்காகச் சென்னை அரசாங்கம் ஒரு இலட்சரூபாய் அளித்திருக்கிறது.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

அப்போது அம்மொழி தமிழர்வாயிலென்பதென்ன, ஆந்திரர் முதயோர் வாயிலுந்தான் இலேசில் நுழையாது. இன்னும் பண்டைத்தமிழர் தமிழ்க்கல்வியோடு மாத்திரந்தானிருந்து வந்தனரா? அவர்வாயில் சம்ஸ்கிருதம் நுழைய மறுத்தாலும் வேறு மொழிகளாவது நுழைந்திருந்தனவா? நவீனர் சொல்வதைப் பார்த்தால் அத்தமிழர் வேறு மொழிகளைப் பயின்றறியாதவ ரென்றே யெண்ண வேண்டியதிருக்கிறது. அங்ஙனமாயின் அவர் கூண்டுக்கிளித் தமிழரே. வள்ளுவர் 'கற்பவை', 'இலங்குநூல்' என்றெல்லாம் விதந்தாரே; அவையெல்லாம் தமிழ்மொழி அல்லது தாய்மொழியில் மாத்திரமுள்ள நூல்களைத்தான் குறிக்குமோ? அல்ல என்பதை நவீனர் அறிக.

அவருக்குத் துணையாகவொரு வரதாசாரியாரகப்பட்டார். சம்ஸ்கிருதம் பொதுமக்கள் அறிந்துகொள்ளக்கூடியதாக எப்போதுமே யிருந்ததில்லை, இனி என்றும் இருக்கப்போவதுமில்லை என அவர் சொன்னாராம். அதையொரு குறையென வைத்துக்கொண்டால் அக்குறை சம்ஸ்கிருதத்தின்பாலதா? பொதுமக்களின்பாலதா? சம்ஸ்கிருதத்தின்பாலதென அவர் சொல்லமாட்டார். பொதுமக்களின்பாலதெனின் அக்குறையை என்றுவது எப்படியாவது நிவிர்த்தி செய்ய முடியுமா? முடியாதா? முடியுமெனின் 'இனி என்றும் இருக்கப்போவது மில்லை' யென அவ்வாசாரியார் சொன்னது தவறு. அரசாங்கம் ஆவன செய்க; அக்குறை நிவர்த்தியாகும். பொதுமக்கள் அறிந்துகொள்ளக்கூடிய நிலைக்கு அம்மொழி இறங்கிவருவதுந் தப்பாது. முடியாதெனின், அக்குறை யிது வென அவர் விளக்கிக் காட்டுக. சாமானியரையெல்லாம் விசேடராக்குவதே நியாயம். சைவருட் சாமானியரை அவரது சமயம் பற்றி விசேட புருஷராக்க வேண்டுமாயின் அவருக்குச் சம்ஸ்கிருதச் சைவநூற்கல்வியைப் புகட்டுவதும் அவசியமாகும்.

14. 'தமிழ் அரசியல்முதல் ஆலயம்வரை முழங்கத்தான்போகிறது' என நவீனர் சொன்னது முன் காட்டப்பட்டது. தமிழ் ஆட்சி மொழியாகும்; அப்போது தமிழர்ச்சனையும் சைவாலயங்களிற் புகுத்தப்படும் என்ற நம்பிக்கை அவருக் குண்டு. தமிழ் ஆட்சிமொழியாவது வரவேற்புக் குரியதே. ஆனல் தமிழாட்சி சைவசமய விவகாரங்களில் தலையிட முனையுமாயின் அது வரம்பு மீறிய செயலென்க. என்னை? தமிழ் ஒருமொழி. மொழியாட்சி பல சமயங்களைச் சார்ந்தவர் கூடிச் செய்வது. கரிச்சட்டை, செஞ்சட்டை, கதர்ச்சட்டை முதலியவற்றுக்கும் அதிற் பங்குண்டு. தமிழர்ச்சனையைப் புகுத்தக் கரிச்சட்டையுங் கைநூக்கும். குளாம்காதர் இராவுத்தருக்குங் கோகுலாஷ்டமிக்கும் என்ன சம்பந்தம், அன்ன சம்பந்தமே அச்சட்டைக்கும் அர்ச்சனைக்குமாம். அச்சட்டையுங் கைதூக்கி யியற்றப்பட்ட சட்டத்துக்கு அவ்வர்ச்சனையைப் புகுத்த யோக்கியதை யுண்டா? 'தமிழ்-அருச்சனை இயக்கத்தை ஆதரித்துப் பொதுக்கூட்டங்கள் கூட்டித் தீர்மானங்கள் நிறைவேற்றி...அதிகாரிகளுக்கும் தெரியப்படுத்த வேண்டும்' என நவீனர் கூறியதும் முன் காட்டப்பட்டது. அவ்வதிகாரிகளாவார் இவ்வரசாங்கத் ததிகாரிகள். அவருமே பல மொழியினரும் வெவ்வேறு சமயத்தினருமா யிருக்கின்றனர். பொதுக்கூட்டமாவது போதுமக்கள் கூடுங் கூட்டம். 'பொதுமக்கட் காகாதே', 'முனிதக்கா ராய பொதுமக்கள் பொல்லாவொழுக்கம்' என்பன பழமொழி நானூறு. அத்தொடர்கட்குக் 'கல்வியறிவில்லாதவர்களுக்கு விளங்காது', 'வெறுக்கத் தக்கவர்களாகிய சிறப்பில்லாத மக்கள் தீயஒழுக்கத்தைப் பூண்டிருத்தல்' என உரைகண்டார் புலவர் ம. இராசமாணிக்கம்பிள்ளை. தமிழர்ச்சனையை அப்பொதுமக்கள் கைதூக்கி ஆதரிக்கவேண்டும், அதனல் நிறைவேறிய தீர்மானத்தை அக்கலவையதிகாரிகள் ஏற்று உத்தரவு பிறப்பிக்க வேண்டும், சைவப்புலமிக்கவரும், முதுமக்களும் அவ்வுத்தரவுக் கடங்கவேண்டும் என்பது நவீனரின் ஆசை. அவ்வாசை அவருக்கு ஆத்மசாந்தியை யெய்துவியாது. அக்கிரமம் அதிகாரியின் உத்தரவாக மாறியதாலேயே கிரமமாய்விடுமா?

(12ம் பக்கம் பார்க்க)



# செட்டிநாடு

உ
சிவமயம்
பாலருவாயர் துணை

'அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து'

சந்தா:
உள்நாடு ரூ—3
வெளிநாடு ரூ—6

துன்முகி மார்கழி- 27

## சண்டேசர் திருநாள்

சண்டபதமென்பது, சிவபெருமானது முழு அதிகாரத்தையும் செலுத்தும் உரிமையுடையது: ஆண்டவன் பொருட்டாக ஆன்மாக்களை செய்யும் வழிபாடுகளுக்குப் பலனை அளிக்கின்றவர் சண்டேச மூர்த்தியே. இதனாலேயே சிவபூசை-சிவாலய வழிபாடுகளில் சண்ட பூசை-சண்டேச வழிபாடுகள் இன்றியமையாதனவென்று விதிநூல்கள் கூறின.

நிலவுலகத்தில் மனிதவுடல் கொண்டு பிறந்து, அந்த உடலுடனேயே அரனார் மகனாராகிச் சண்டபதம் பெற்றவர் திருச்சேய்ஞலூரில் தோன்றிய விசாரசருமனார். 'பாதக மென்றும் பழியென்றும் பாராதே தாதையை வேதியனைத் தாளிரண்டும்-சேதிப்பக், கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே, சண்டீசர் தஞ்செயலாற் றான்' என்பது திருக்களிற்றுப் படியார்.

உலகியலிற் பாதகமென்றும் பழியென்றும் சொல்லத்தக்க நிலையில் தாதையாகிய வேதியனைக்கொன்ற விசார சருமருக்குச் சிவபுண்ணியம் முன்னின்று, சண்டபதத்தைக் கொடுத்தது. சிவபுண்ணியப்

பெருஞ்சிறப்பை அறிவுறுத்திக்கொண்டிருக்கிற அந்தச் சிறிய பெருந்தகையாரது திருநாள் **20-1-57** ஞாயிற்றுக்கிழமையாகும்.

## தாயுமானர் திருநாள்

திருமூலதேவ நாயனாரது பரம்பரையில் அருளுபதேசம் பெற்றுச் சிறந்தவர் மௌனசுவாமிகள். இவரால் நிறுவப்பெற்றது திருச்சிராப்பள்ளியில் இப்பொழுது தருமபுர ஆதீன நிர்வாகத்திலிருந்து வருகிற மௌனமடம். இந்தத் திருமடத்தில் ஞானேபதேசம் பெற்று விளங்கியவர் தாயுமான சுவாமிகள்.

திருமூலதேவர் பரம்பரையில் வந்து சிவஞான சித்திநெறியைக் கடைப்பிடித்துத் திருவருட்பேறு பெற்றவர், தாயுமான அடிகளென்பதை அவரது திருப்பாடல்களால் அறிகின்றோம்.

சித்தியாரிலுள்ள ஒரு திருப்பாடலின் ஒருபாதி விருத்தமே, சுவாமிகளுக்கு உலகப்பற்றை ஒழித்து உண்மையைச் சாதித்துக் கொடுத்தது. இதனை அவர்களே 'பாதிவிருத்தத் தாலிப் பார்விருத்த மாகவுண்மை, சாதித்தார் பொன்னடியைச் சாருநா ளேங்நாளோ' என்று அறிவிக்கின்றார்கள்.

சோழநாட்டில் தோன்றிச் சிவஞானப்பிழம்பாய் எழுந்தருளியிருந்து பாண்டிநாட்டில் சிவபரிபூரணமடைந்த சுவாமிகளின் நினைவுநாள் **24–11-57** வியாழக்கிழமையாகும்

### இந்தியப் பயிற்சியாளர்கள்

*ஜெனரல் பெடரல் குடியரசில் உள்ள தொழில்துறை ஸ்தாபனங்களில் தற்போது மொத்தம் 263 இந்தியப் பயிற்சியாளர்கள் பயிற்சிபெற்று வருகின்றனர்*

(9ம் பக்கத் தொடர்ச்சி)

'வைணவம் என்றும் தமிழுக்கு முதலிடம் கொடுக்கிறது; இன்றும் அது இருக்கிறது. இவ்விஷயத்தில் சைவம் ஒருபடி பின் தங்கியதுதான் எனக்கொள்ளவேண்டும். இந்த நிலைமை மாறும் நிலை ஏற்படவேண்டும். சுந்தரர் காலத்தில் சைவக் கோவில்களில் தமிழுக்கு முதலிட மிருந்தது. ஆனால் நாளடைவில் இது ஏனோ மாறிவிட்டது' (14-1-54 தினமணி) என்கிறார் நவீனர். வைணவம் தமிழுக்கு முதலிடங் கொடுக்கிறதென்பது உண்மையாயின் அச்சமயம் மற்றைப் பிரதேசமொழிகள் விஷயத்திலும் அப்படித் தானென்பது போதரும். ஆனால் அப்படி யில்லை அதுபோலவே தமிழிலு மில்லை யென்க. அஃதிருக்கட்டும். தமிழ், வைணவம் ஆகிய இரண்டனுள் எதற்கு முதலிடம்? எதற்குக் கடையிடம்? அவ்வினவுக்கு வைணவங்கூறும் விடையை நவீனர் காட்டுக. எக்காரணத்தாலும் வைணவம் தனக்குக் கடையிடத்தை ஏற்றுக்கொள்ளவே இசையாது தானே முதல், தமிழ் தன்னை அனுசரித்ததுதான் என்றே அது கொள்ளும். தானே தேச முழுக்கப் பாஷைக ளனைத்திலும் பரவியிலங்க வேண்டுமென்பது அதற்கு லக்ஷியம். அது தமிழுக்கு முதலிடங் கொடுக்கிறதென நவீனர் எதைக்கண்டு சொல்கிறார்? பெருமாள் வீதிவலம் வருவார். அவருக்குமுன் தமிழ்நாலாயிரமும்: பின் சம்ஸ்கிருத வேதமும் ஓதப்பட்டு வருமென்பது கேள்வி. அதைக்கண்டு நவீனர் அப்படிச் சொல்கிறாரோ என நான் நினைக்கிறேன். அங்ஙனமாயின் அவர் சொல்வது தவறு. எப்படி? வேதம் பெருமாள் வாக்கு; பிரபந்தம் அவர் தாசன்மாராகிய ஆழ்வார் வாக்கு; அச்சமயக் கொள்கை அது. பெருமாள் தம் வாக்கைவிடத் தம் தாசன்மாரின் வாக்கை விரும்புகிறார் அதற்கடையாளந்தான் தமக்குப்பின் தம் வாக்கையும், முன் தாசர் வாக்கையும் ஓதிவரும்படி அவர் பணித்தது. அவ்வளவிற் கொள்வது குற்றமாகாது. உண்மையப்படியிருக்க மொழிபற்றிய முதலிடங் கடையிடமென்ற கொள்கையைச் சாதிப்பதற்கு அவ்வரிசையை எடுத்துக்காட்டல் நியாயவிரோதம். இனி, வேதம் சிவவாக்கு, திருமுறைகள் அடியார் வாக்கு என்பது சைவம். அங்கும் சிவபிரான் தன் வாக்கைவிடத் தம் அடியார்வாக்கை விரும்புவார். அதற்கடையாளமாக

வீதியுலாவில் அவருக்குமுன் திருவெம்பாவையும், பின் வேதமும் ஓதப்பட்டு வருவதைக் கொள்ளலாம். அவ்வுலாவில் சுவாமிக்குப் பின் வேதபாராயணமும், அதற்குப்பின் திருமுறைப் பாராயணமும் நடந்துவருவது முண்டு. சுவாமியை வேதம் அநுசரிக்கிறது, வேதத்தைத் திருமுறை அனுசரிக்கிறது என்பதைக் காட்டுவது அவ்வரிசை. அதிலும் மொழிபற்றிய முதலிடங் கடையிடங்களென்ற பேச்சுக்கிடமில்லை. நவீனரோ சுவாமியையே தமிழுக்குப்பின் தள்ளப் பார்ப்பார். அவர் சம்ஸ்கிருதத்தைத் தமிழுக்குமுன் இருத்தப் பார்ப்பரோ? என்னே அவர்து தமிழ்வெறியின் வீக்கம்! அவ்வேதபாராயணத்துக்கும் திருமுறைப்பாராயணத்துக்கும் இடையில் வேறெந்த பஜனைக்கோஷ்டியும் இடம்பெற்றுச்செல்ல அநுமதி கிடையாது. சமீப காலத்திலிருந்து ஒன்றிரண்டு சைவாலயங்களில் உத்ஸவத்தின்போது சுவாமி வீதியுலா வருகையில் அவ்வரம்பு மீறப்படுகிறது. வேறு கோஷ்டிகள் நடுவிற் புகுந்து ஏதேதோ பாடிக்கொண்டு செல்கின்றன. அது திருமுறையை அவமதிப்பதாகும். நவீனர் கண்ணில் அஃதுறுத்தவில்லை. ஏன்? அக்கோஷ்டிப் பாடல்களுந் தமிழ்தானே: அவ்வளவில் அவர் மகிழ்கிறார். திருவாதிரைத்திருவிழா நாட்களில் திருவாசகந் தவிர மற்றைத் திருமுறைகளை ஓதாமை சைவருள் ஒருவழக்கமாயிருந்து வருகிறது. அத்திருமுறைகள் தாழ்ந்தனவா? அவற்றை அந்நாட்களில் ஓதுவது பாவமா? ஆமெனின், அது திருமுறை நிந்தை. அவ்வோதுவதோதாமைகளுக்கு உண்மைக் காரண மிதுவெனக் கண்டு, பன்னிரு திருமுறைகளுஞ் சமப்பிரமாணமே யென்ற சாத்திர வரம்பைக் காத்துக்கொள்வ தன்றோ அறிவுடைமை? அங்ஙனமே முதலிடங் கடையிடமென்ற விபரீதத்தை விடுவதூஉமாம். 'தமிழில் அதிகப்பற்றுள்ளவர் வைணவ மதத்தினர். ஆனாலும் அது சமஸ்கிருதத்தை அஸ்திவாரமாகக் கொண்டுதான் ஏற்பட்டிருக்கிறது' (14-1-54 தினமணி) என்கிறார் ஐயங்காரொருவர். சம்ஸ்கிருதத்தை அஸ்திவாரமாகக் கொண்டதெனச் சொல்லப்பட்ட வைணவம் சம்ஸ்கிருதத்துக்குக் கடையிடங் கொடுக்குமா?

(தொடரும்)

## தமிழில் ஆட்சி

சென்னை டிச 27- தமிழில் ஆட்சி நடத்த வகை செய்யும் மசோதா சென்னைசட்டசபையில் இன்று ஒருமனதாக நிறைவேறியது. 'வாழ்க தமிழ்,வளர்க தமிழ்' என்ற முழக்கங்களிடையே மசோதா நிறைவேறியது.

'தமிழ் அன்னைக்கு முடிசூட்டும் திருநாள் இது' என்று சட்டசபையில் அமைச்சர் திரு. சுப்பிரமணியம் பெருமிதத்துடன் கூறினர்.

மசோதாவுக்குக் கொண்டுவரப்பட்ட திருத்தங்கள் அனைத்தும் திரும்பப் பெறப்பட்டன சென்னை சட்டசபையில் ஒருமனதாக ஒருமசோதா நிறைவேறியது இதுவே முதல்தடவை.

சென்னை சட்டசபையில் இன்று ஒரே தமிழ்மணம் கமழ்ந்தது, திரு, பி. டி. இராசன் உள்படப் பேசிய உறுப்பினர்கள் அனைவரும் தமிழ்மொழியிலேயே பேசினர்கள். பல உறுப்பினர்கள் சிறப்புப் பாடல்களைப் பாடிக்காண்பித்து, தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். இந்த மசோதாவை எதிர்க் கட்சியினர் ஒருமனதாக வரவேற்றனர்.

நிதிஅமைச்சர் திரு, சுப்பிரமணியம் மகிழ்ச்சிததும்பக் கூறியதாவது:– தமிழ்த் தாய்க்கு முடிசூட்டும் திருவிழா, இந்நாள் சென்னை நிருவாக இயந்திரத்தைத் தமிழில் நடத்த, அரசாங்கம் உறுதிகொண்டிருக்கிறது. அதற்கான நடவடிக்கைகளை அரசாங்கம் துரிதமாக மேற்கொண்டிருக்கிறது. அரியாசனத்தில் தமிழ்த் தாய் அமரும் இந்நாள் தமிழ்நாட்டின் சரித்திரத்தில் முக்கியமானநாள்; பொன்னுள் என்று அமைச்சர் பூரிப்புடன் கூறினர்.

## மோட்டார் கார் உற்பத்தி

இந்தியாவில் தற்போது மூன்று தொழில் ஸ்தாபனங்கள் மோட்டார் கார் உற்பத்தியில் ஈடுபட்டு வருகின்றன. அவை மூன்றும் சேர்ந்து ஆண்டொன்றுக்கு மொத்தம் 33,000 கார் உற்பத்தி செய்யக்கூடியவை.

## காஞ்சி மெய்கண்டார் கழகம்

திருநாவுக்கரசு நாயனர் இடபக்குறி சூலக்குறி பெற்றதும், கலிக்கம்பநாயனர் மெய்கண்டதேவர் அவதாரஞ் செய்ததும் ஆகிய திருப்பெண்ணுகடத் தூங்கானைமாடத் திருக்கோயிலில் கழகத்தின் 1097 ஞாயிறு வழிபாடு 30-12-56ல் நடைபெற்றது. சிவஞானபோத வெளியீடு மெய்கண்ட தேவநாயனர் சந்நிதியிலும், திருப்பெண்ணுகடத் தேவாரத்திரட்டு வெளியீடு தூங்கானைமாடக்கோயிலிலும் வெளியிடப்பட்டன. சிலோன் முன்னாள் அமைச்சர் நடேசப்பிள்ளையவர்களும் சென்னை ஸ்ரீ சச்சிதானந்தம் பிள்ளையவர்களும் கழக வெளியீடுகளை அன்பர்களுக்கு வழங்கினர். சிவஞானபோதக் கூட்டுப் பிரார்த்தனைக்குப்பின் கழகச்செயலாளர் திருஞானசம்பந்த முதலியார் 'வெளியீடுகளின் முக்கியக் கருத்துக்கள்' என்பதுபற்றிச் சொற்பொழிவாற்றினர். 500 அன்பர்கள் தாய்மார்கள் கலந்து இன்புற்றனர்.

---

# தேதிப்படங்கள் வரப்பெற்ருேம்:

சுன்னுகம் ஈழகேசரி திகதி அட்டவணை, 1957. குருபூசைத் தினங்கள், அரசாங்க, வங்கி விடுமுறைநாட்கள், விசேஷ தினங்கள் விவரங்களடங்கிய மாதத் தேதிப்படம்.

தேவகோட்டை பவுன் ஆபாரணமாளிகை ந. நா. நந்தகோபாலன்செட்டியார் வெளியிட்டது, தமிழ் ஆங்கிலத் தேதிகள், திதி; வாரம், நட்சத்திரம், யோகம், விசேடநாள். அரசினர் விடுமுறை நாள் விவரங்களடங்கிய நாள் தேதிப்படம்

சென்னை மாடல் டைப் பவுண்டரியார் வெளியிட்டது. அரசாங்க விடுமுறைநாட்கள் விசேடநாட்கள் விவரங்கள் அடங்கிய மாதத் தேதிப்படம்.

## கவிதை — பொங்கல் வாழ்த்து

உலகம்பட்டி, ம. வெ. நாராயணன்

துன்முகிதைத் திங்கள் தொடக்கநன் னாளன்று
நன்மைபெறப் பால்பொங்க நாம்காண்போம் மன்னுதமிழ்
ஆட்சிபுரி யக்கண்டக மகிழ்வோம்! எஞ்ஞான்றும்
மாட்சியுடன் வாழ்வோம் மகிழ்ந்து!

பொங்கியபால் கண்டுள்ளம் பூரித் தரிசியுடன்
தங்கியசீர் நெய்வெல்லம் தான்சேர்த்து-எங்கும்நிறை
ஈசற்குப் பூசிப்போம்! ஈந்தும் மகிழ்வடைவோம்
நேசமுடன் வாழ்வோம் நிலத்து!

வள்ளுவரைப் போற்றிடுவோம் வண்தமிழைக் காத்திடு
[வோம்
தெள்ளுதமி ழில்கவிதை செய்திடுவோம்! உள்ளத்தால்
பொய்யா தொழுகிப் புகழ்பெறுவோம் வாருங்கள்
ஐயன் தருவான் அருள்!

### மானக்கஞ்சாறநாயனர்

27-12-56 மாலை நாகர்கோவில் நன்னெறி மன்றத்தின் சார்பில் மானக்கஞ்சார நாயனர் குருபூசை 36வது பிரார்த்தனைக் கூட்டம் இராமவர்மபுரம் மன்றம் நிலையத்தில் நடைபெற்றது. திருவாவடுதுறையாதீனம் சுசீந்திரட்டம் ஸ்ரீலஸ்ரீ திருஞான சம்பந்தத்தம்பிரான் தலைமை தாங்கினர். திருமுறை யோதல், தியானம், பஜனை, நன்மொழிவழங்கல், மௌனம், அருச்சனை ஆகிய பதிவு நிகழ்ச்சிகள் வழக்கம்போல் நடந்தேறின. ஸ்ரீ மத் தம்பிரான் சுவாமிகளும் சைவப்புலவர் இ. பகவதிப்பெருமாள்பிள்ளையும் நாயனரைப்பற்றி நல்லுரை வழங்கினர்.

தொடர் நாடகம்:

# தியாகச்சுடர்

சித-சேதுராமன்

## காட்சி-1

[பாண்டியன் இங்குமங்குமாக நடந்துகொண்டிருக்கிறான். அவனது தந்தை துரைசாமிபிள்ளை வருகிறார்.]

துரைசாமிபிள்ளை:- பாண்டியா சீக்கிரம் புறப்படு.

பாண்டியன்:- எங்கே அப்பா!

துரை:- மாணிக்கம்பிள்ளை வீட்டிற்குப் பெண்பார்ப்பதற்கு!

பாண்:- யார்? சரளாவையா! நான் திருமணம் செய்துகொள்ள முடியாது

துரை:- பாண்டியா! சரளா பணக்காரப்பெண்-மாணிக்கம்பிள்ளையின் ஒரே புதல்வி. அவர் மாண்டால் சொத்துக்கள் யாவும் நமக்கே.

பாண்:- பணம்! [பல்லைக்கடிக்கிறான்] நம்மிடமுள்ள பணமே நாலு தலைமுறைக்குப் போதுமேயப்பா! ஏழைகளை ஏமாற்றி, அவர்களது கண்ணீர்க்குளத்திலே நீந்தும் அந்த நேர்மையற்றவன் சம்பாதித்த பணம் யாருக்கு வேண்டும்.

துரை:- பணத்தின் அருமை தெரியாமல் உளறுதே.

பாண்:- நான் தேன்மொழியைத்தவிர வேறு யாரையும் மணக்க முடியாது.

துரை:- யாரடா அவள்?

பாண்:- பக்கத்துத்தெரு கலாவின் மகள்.

துரை:- கலா! காசுக்குக் கற்பைக் காணிக்கை வைக்கும் அந்த வேசியின் மகளையா! அவளை மணந்தால் உலகம் ஏசுமடா ஏசும்

பாண்:- வேசிகுலத்தில் பிறந்தால் விபச்சாரியா? பரத்தையர் குலத்தில் பிறந்த மணிமேகலையை உலகம் போற்றவில்லையா? அவள் உங்களுக்கு வேசியின் மகள். எனக்கு விலையில்லாத மாணிக்கம். அவளை மணந்தால்மட்டும் உலகம் ஏசும். கள்ளர்

கூட்ட மறைமுகத்தலைவன்-அக்கிரமத்தின் மொத்தவியாபாரி-மக்கள்ஏசும் மாண்புகெட்டவனின் மகளை மணந்தால்மட்டும் உலகம் ஏசாதோ? பணம் என்ற திரையில் அது மறைந்து விடுமோ?

துரை:- இந்த எண்ணம்........

பாண்:- கடைசிவரை மாருது.

காட்சி-2

[காலைநேரம். தேன்மொழியின் இல்லம். அவளது அன்னை கலா கட்டிலில் உடல்நலமற்றுப் படுத்துக்கொண்டிருக்கிருள். அவளருகே தேன்மொழி சேக்ஸ்பியரது ஆங்கிலநாவலை வாசித்துக் கொண்டிருக்கிருள்.]

கலா:- தேன்மொழி! என் வாழ்நாள் இன்றே நாளையோ முடியப் போகிறது. நான் என் வாழ்க்கை முழுவதையும் தீயவழிகளிலே செலவிட்டுவிட்டேன். நீ படித்துப் பட்டம்பெற்று - நல்லவளாக -எனக்குமாருக-எல்லோராலும் புகழப்பெறும் உத்தமியாக வாழ வேண்டுமென்பது என் ஒரே அவா. அதைப் பூர்த்திசெய்வாயா?

தேன்:- தங்கள் ஆசையே என் ஆசை. நிச்சயம் நிறைவேற்று வேன் அம்மா. மாதர்குலமாணிக்கமாக-கற்புக்கரசி கண்ணகியைப்போல் வாழுவேனம்மா. நிச்சயம்நம் குலத்து மாசை அகற்றிப் பெருமைப்படுத்துவேன். [கலாவின் தம்பி குமார் வருகிருன்]

குமார்:- அக்கா! இந்த மருந்தைச் சாப்பிடு. சீக்கிரம் உடல் குணமாகிவிடும்.

கலா:- எனக்கெதுக்கப்பா மருந்தும் மாத்திரையும்?

குமார்:- தேன்மொழி! என்ன இவ்வளவு சீக்கிரமாய்க் கல்லூரிக்குக் கிளம்பிவிட்டாய்!

தேன்மொழி:- இன்று நாடக ஒத்திகை.......

குமார்:- இருக்கும். காத்திருப்பார்கள். சீக்கிரம் செல்.

காட்சி-3

[கல்லூரி ஆண்டு விழாவை முன்னிட்டுக் 'கண்ணகி' நாடகம் நடைபெறுகிறது. தேன்மொழி கண்ணகியாகவும், பாண்டியன் நெடுஞ்செழியனுகவும் தோன்றுகின்றனர்.]

திரை மறைவில் எழும் குரல்: ஐம்பெருங்காப்பியங்களுள் முத்தமிழ்நாட்டின் மேன்மையைச் சித்தரித்துக்காட்டும் சிறந்த கருவூலம்-கற்றவர்போற்றும் இளங்கோ தீட்டிய இதயங்கவர் சிலப்பதிகாரத்தில்ஓர்காட்சி. கண்ணகி வழக்குரைத்தபகுதி. கணவன் இறந்தான் என்ற மொழிகேட்டு, நிலைதடுமாறிக், கண்ணீர்பெருக தலைவிரிகோலமாய்,வாட்டமுற்றதோற்றத்துடன்,சீற்றம்கொண்டு செல்கிறாள் மன்னன் அவைக்கு நீதியை வேண்டிக் கண்ணகி.

மன்னன்:- கண்டவர் அஞ்சும்வண்ணம் கோரக் காட்சியுடன் தோற்றமளிக்கும் காரிகையே! நீயார்?

கண்ணகி:- உண்மையை ஆய்ந்தறியும் திண்ணிய மதிநலமற்ற மன்னவ! கன்றிழந்த பசுவின் கதறல்கண்டு, உள்ளம் உடைந்து, தன் ஒரேமைந்தனை - குலக் கொழுந்தை – வம்சம் தழைக்கவந்த வாரிசை, அரசுநலம் தழைக்க - அறம்வளர - செங்கோல்செழிக்கத் தேர்க்காலில்இட்டு நசுக்கிய மனுநீதிச் சோழனும், புறாவின் உயிருக்காகத் தன் உடலீந்த தாணிபுகழும் சிபியும் ஆண்ட வளப்புமிகு சோழநாட்டின் மாட்சிமைமிக்க பூம்புகார்ப்பதியே என்னூர். செல்வம் செழித்தோங்கச் சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்துவந்த மசாத்துவான் மகள். ஊழ்வினை உந்த - வறுமை வருத்த - காற்சிலம்புவிற்க உன்நகர்புகுந்து உன்னால் கொலையுண்டிருந்த கோவலன் மனைவி. என்பெயர் கண்ணகி.

மன்னன்:- பெண்ணே! சிலம்பைக் கவர்ந்த கள்வனைக் கொல்லுதல் அநீதி அல்லவே!

கண்ணகி:- நற்றிறம் படாக் கொற்கைக் கோவே! என் காற்சிலம்பு மாணிக்கப் பரல்களை உடையது.

மன்னன்:- பெண்ணே! என் ராணியின் சிலம்பு முத்துக்களை உடையது.

[மன்னன் ஏவலாளரிடம் கோவலன்பால் பெற்ற சிலம்பைக் கொணர்க என்று கட்டளையிடுகிறான். காவலாளிகள் சிலம்பைக் கொண்டுவந்து முன்வைக்கின்றனர்.]

(தொடரும்)

## ஒரு திருத்தம்

சென்ற 27-12-56ல் வெளிவந்த இதழ் பக்கம் 6ல் நோட்டீஸ் பிரதிவாதி பெயர் பெ. மு. முருகப்பன்செட்டியார் என்றிருப்பதை, பெ. மு. முருகய்யன்செட்டியார் என்று திருத்தி வாசித்துக்கொள்க.

## வைரங்கள் இறக்குமதி

1955-56-ல், இந்தியாவில் மொத்தம் 13.09 லட்சம் ரூபாய் மதிப்புள்ள வைரங்கள் இறக்குமதி செய்யப்பட்டது. அதற்கு முந்திய வருஷத்தில் மொத்தம் 10.09 லட்சம் ரூபாய் மதிப்புள்ள வைரங்கள் இறக்குமதியாயின.



புதுடில்லி ராஷ்டிரபதிபவனில் 20-11-56உ யில் சென்னை விவசாயிகளும், குடியரசுத் தலைவரும்.



# பரிபூரணம் ஆனார்கள்

மதுரைத் திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனம் **291**வது குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்துஅருளாட்சிபுரிந்துவந்த ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் **7-1-57**உ திங்கட்கிழமை இரவு திருத்தருப்பூண்டியை அடுத்த பன்னக தெருவில் சிவபரிபூரணம் ஆனார்கள்.

